இலிங்கமூர்த்தியைத் தடுத்துக்கோகர்ணக்ஷேத்திரமாக்குவித்தவர்.

உமாதேவி சாபத்தால் விஷ்ணுவுக்குற்ற கரும்பாம்பு வடிவையொழித்தவர்.

இவரையுபாசித்தவர்கள: இந்திரன் பிரமன் விஷ்ணு உமாதேவி தக்கன் வீமன் நளன் கர்த்தமன் சித்திராங்கதன் மன்மதன் அங்காரகன், புருசுண்டி ஆதிசேடன் சந்திரன் இப்பிரப்பிரசாதனனை கிருதவீரியன் சூரசேனன் பரசிராமன், அகத்தியர் காசிபர்முதலிய முனிவர்கள், இராவணதிராக்கதர்கள், திரிபுரதகனகாலத்தில் கணபதிபூஜை செய்யாமையின் தேரின அச்சுமுரிந்தபொழுது சிவபிரான்முதல்எணணில்லாதவர்கள்.

இவர் பிரபாவத்தை விரித்துக் கூறுவது விநாயகபுராணம். இது உபபுராணம் பதினெட்டனு ளொன்று இவர்க்குச்சோடசமூர்த்தங்களுள. காசியிற்சதாவர்ணததில் அறுபத்து நான்கு கணேச மூர்த்தங்களுளவென்பர். இவர்க்கு மனைவியர் சித்திபுத்திகள, வலலபை, நவசத்திகள் முதலெண் ணில்லார். இவர்புத்திரர் இலக்ஷன இலாபனெனப்படுவோர், இவ்விருவர் பெயரையே யெண்ணிக்கையின் முதலிற்பலர் சொல்வது வழக்கம்.

விக்கினங்களைத் தவிர்ப்பவராதலின் விக்கினேசுவரரென்றுமகூறப்படுவர். இவர் தாரகிய யானைத்தலை பிரணவவடிவும், பாசம்வியாபகமும், அங்குசம அருளும், ஐங்கரங்களும் அளவிலாற்றலும, பாதமிரண்டும் சித்திபுத்தியும், பரந்த செவிகள் சர்வஞ்ஞத்துவமும், ஏகதந்தம் பரஞானமும், ஒடித்த தந்தம் அபரமும், லம்போதரம் பெருறையுடைமையும் விளக்கும் ஞானசொரூபமாம்.

கணபதீசர் — திருச்செங்காட்டங்குடியில் சிவபிரான் திருநாமம்.

கணபதீச்சரம் — திருச்செங்காட்டங்குடியிலேயுள்ள சிவாலயம்.

கணம்புல்லநாயனர் — அறுபான்மூமை நாயனமார்களு ளொருவர். இருக்குவேளூரிற்பிறந்தவர். சிதம்பரத்துள்ள புலீச்சர மென்னுஞ் சிவாலயத்தில் தீபத்திருத் தொண்டினைக்கைக்கொண்டு அதற்காகத் தமது செல்வத்தை யெல்லாம் போக்கிக் கணம்புல் லரிந்துவிற்று அதனல் வரும்ஊதியத்தைக் கொண்டு அக்கைங்கரியத்தைச்செய்து வருகையில், ஒருநாள் நெய்போதாது தமது முடியைத் திருவிளக்கிலேற்றி யெரிக்கையில், சிவபிரானல் முத்தியளிக்கப் பெற்றவர்.

கணாசனர் — கணாதர். இவர் வைசேடிக மதாசாரியர். நொய்யைப்புசிப்பவராதலின இப்பெயரேற்றனர்.

கணாதன் — வைதிகசாஸ்திரங்களாறனுள வைசேஷிக சாஸ்திரஞ்செய்தஒரிருடி. இவருடையபின்ளைமைப்பெயர்காசியபர். அணுவையும்பினந்துபரிசோதித்த நுண்மதியுடையரென்பதுபதப்பொருள். [கணம் = அணு, அதர் = அழித்தவர். வைசேஷிகம நியாயசாஸ்திரம் போலத்தருக்கபாகமேகூறும்] அதிதிகணவரான காசிபர்வேறு இவர் வேறு.

கணிகன் — திருநாட்டிற்னுடையபிரதானமந்திரி. அக்கிரமமாக இரா

ச்சியம் புரியத்தக்க அதர்மமார்க்கங்களைப் போதிப்பதில்பேராற்றலுடையவன். இவன் செய்த மந்திராலோசனையினாலேதிருதராட்டிரன் தன்மகனான துர்யோதனன் விருப்பிற வெல்லாமிணங்கினன்.

கணியன் பூங்குன்றனார் — உக்கிரப்பெருவழுதியின் காலத்திற்கு முற்படவிருந்தவொருபுலவர். பேர்யாற்றருகே பூங்குன்று என்னுமூரிலே கூதசர் குலத்தி லுதித்தவர். இவர் மேம்பட்டகல்வியும் நல்லொழுக்கமுமுடையவர். இவர்பாடல் புறநானூற்றிற் காணப்படும்.

கணியூர் சிறியாழ்வான் — வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

கணேசர் — கணபதியிற்காண்க.

கண்டகி — கங்கையின் உபநதிகளிலொன்று. இது மகததேசத்துள்ளது.

கண்டராதித்தர் — ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பாப்பாடியவருளொருவர். உறையூரிலிருந்தரசுசெலுத்திய சோழ ராஜாக்களுளொருவர்.

கண்டாகர்ணன் — (1) ஒருபிசாசபதி. குபேரனுடையகிங்கரரிலொருவன் வதரிகாசிரமத்தில் போகத்திலிருந்தகிருஷ்ணனை வழிப்பட்டுப்பிசாசவடிவ நீங்கியவன். (2) அரிநாமங் கேட்க விருப்பின்றிக் காதில் மணி கட்டிக்கொண்டிருந்த சிவபக்தன். அரிதியானமே மிகுந்திருந்தமையின் இறுதியில் வைகுந்தமுற்றவன்.

கண்டீரக்கோப்பெருநள்ளி — நள்ளியெனவும்படுவன். கடையெழுவள்ளல்களிலொருவன். தோட்டியென்னுமலைக்கும் அதைச் சேர்ந்த மலைநாட்டிற்கும் காட்டிற்குந்தலைவன். நட்பினர்இல்லத்திற்குவேண்டுவனவற்றை நாடோறங் கொடுத்துவந்தவன். இவனைப்பாடியபுலவர்கள் வன்பரணர் பெருந்தலைச் சாத்தனார். "ஆர்வமுற் - றுள்ளி வருந ருலைவு நனி தீரத் - தள்ளா நீயுந் தகைசால் வண்மைக் - கொள்ளா ரோட்டிய நள்ளி" எனப் புகழ்ந்து பாடப் பெற்றவன்.

கண்ணகனார் — கோப்பெருஞ் சோழனுயிர்க்குத் துணைவராயிருந்து அவன் இறந்ததைத்தாமே யுணர்ந்து அவனோடுயிர்நீத்த பிசிராந்தையாரைப் புகழ்ந்துபாடிய புலவர்.

கண்ணகி (1) கற்பின்மேம்பட்டகாரிகை. இவள் ஜைனமதச் சார்பினளெனச் சிலப்பதிகாரத்தாலும், பௌத்தமதச்சார்பினளென மணிமேகலையாலுந்தெரிகின்றது. இவள் கோவலனெனும்வணிகன் மனைவி. இவள் கற்பின்மேம்பாடு சிலப்பதிகாரத்தால் நன்குவிளங்கும். இவளுக்குக் கற்பின் தெய்வம் திருமாபத்தினி பத்தினித்தெய்வம் மங்கலமடந்தை வீரபத்தினியெனவும்பெயர்களுண்டு. இவள் மறக்கற்பினள்.

கோவலன் தன் காமக்கிழத்திக்காகத் தனது செல்வ முழுதையும் போக்கி, வறியனாய்த் தேட்டங்கருதி, தன் மனைவியுடன் காவிரிப்பூம்பட்டினத்தை யகன்று, மதுராபுரிசேர்ந்து, தன்மனைவி கண்ணகியின் காற்சிலம் பொன்றினை விலைசெய்யச் சென்றனன். அச்சமயம் பாண்டிமாதேவியின்காற்சிலம்பை வாங்கிச்சென்றபொற்கொல்லனொருவன் அதனை விற்று அனுபவித்துக்

கள்வர்கவர்க் கைவிட்டு நீங்கியதெனநடித்துவந்தமையின், இச்சிலம்பைக்கண்டு, பாண்டியனிடஞ் சென்று சிலம்புதிருடியவனகாணப்பட்டனனென்ற, அரசனை மதிமயக்கிக்கோவலனைகொல்வித்தனன் அதனையறிந்த கண்ணகி அரசன்பாலடைந்து தன்வரலாறுணர்த்தி, தன் சிலம்புளிருக்கும் பரல் மணியெனவுணர்த்த, மன்னனென் தானை புரிந்தது தவறென இணங்கினபின்னே, சோகாக்கினிமிக்கமையின் தன்முலையுளொன்றைத் திருகிமதுரைமீது வீசி உயிர் துறந்தனள். அதனால்மதுராபுரியெரிந்தழிந்தது

அரசன்இவளதுகற்பினைக்கண்டு பத்தினிக்கடவுளென்று, பலநகரங்களிற் கோயிலமைத்துப் பூசையும் விழவும் நடப்பித்தனன். அச்சமயத்தில் கயவாகு வென்னு மரசன் இலங்கையிற்கண்ணகிகோயிலமைத்தனன்.

(2)கடையெழுவள்ளல்களிலொருவனாய பேகன்மனைவி. இவளைப் பிணக்குற்றுப் பேகன் பிரிந்தகாலத்தில் கபிலர் பரணர் அரிசில்கிழார் பெருங்குன்றூர்க்கிழார் முதலிய புலவர்கள் சந்தி செய்து வைத்தனர். புறநானூற்றிற் சிலபாடல்கள் இப்பேகனையும் கண்ணகியையும்பற்றிக்கூறும்.

கண்ணஞ்சேந்தனார் — பதினெண்கீழ்க்கணக்கினு ளொன்றான திணைமொழியைம்பதுஎனுநூலாசிரியர். இவர்பிதா சாத்தந்தையார்.

கண்ணப்பநாயனார் — அறுபான்மும்மைநாயன்மாருளொருவர். வேடர்குலத்திலுதித்தவர். உடுப்பூரிலேயிருந்த நாகனென்னும் வேடராசனுக்குத்தவப்புத்திரராயுதித்த, திண்மையா யிருந்தமையின், திண்ணனெனப்பெயர்பெற்று இளமையில் தமது குலத்திற்குரியவில்வித்தைமுதலிய கற்று வல்லுநராய், கன்னிவேட்டை பயின்று பின்னொருநாள் நாணன் காடனென்னுமிருநண்பரோடு வேட்டைமேற் சென்றஒருகாட்டுப்பன்றியைத் துரத்திக்கொண்டு வெகுதூரஞ் சென்று காளத்திக் கருகில் அதனைக்கொன்று தாகவிடாயற்று, நாணனை நோக்கி அதோ தோன்றுகின்ற குன்றருகே நீரிருக்குமோ வென, நாணன் ஆம்அங்கே நீருங்கிடைக்கும். குடுமித்தேவரையுந்தரிசிக்கலாமென, திண்ணனார் அங்குற்று, சிவலிங்கப் பெருமானைத்தரிசித்து ஐயோநீர்இத்தனி வனத்திலிருந்தால்துஷ்டமிருகங்கள் ஊறுசெய்யுமேயனக்கதறிக்கட்டிக்கொண்டும், அழுதும் முத்தமிட்டும் பிரியவிருப்பின்றி நெருங்கிநிற்ப, நாணன்பலவாறுகூப்பிட்டும்வராது நிற்க. இனியிவன் குடுமித்தேவர் மயலிற்பட்டானென விடுத்தூத்தன்வழியேஉடுப்பூரையடைந்து ஏனையோர்க்குச்சங்கதியை வெளியிட்டனன்

திண்ணனாரோதாம் வீழ்த்தியபன்றியினிறைச்சியை அம்பிற்கோத்துப்பதஞ்செய்துதேக்கிலையாற்கல்லைசெய்து அதிலிட்டுத் தேனுங்கலந்தெடுத்துக்கொண்டு சிவலிங்கப்பெருமானை வேண்டியுண்பித்தனர். பெருமானுக்கு வாயில்திருமஞ்சனமும் குடுமியில் இலைப்பத்திரங்களுங் கொண்டுவந்து பூசிப்பர்.

வில்லுமம்புங்கொண்டு இரவும்பகலும் காவல்புரிவர். இப்படியேஐந்துநாள்கள் சிறுவேட்டைசெய்துநிவேதனஞ் செய்து சிவபூசை முடித்து வருகையில், அவ்வுணவாலுண்டான என்புமுதலிய மிச்சில்களைச் சிவபூசைக்குவருஞ்சிவகோசரியார் திருவலகிட்டு வருந்தி எம்பெருமானே! இவ்வாறு எக்கொடியர் செய்தனரோ? நேர்வரவஞ்சா வேடுவரேசெய்திருப்பர் என வெறுத்துக்கொள்ள, இறைவர் நாளையுமக்குக் காட்டுதும் எனவுணர்த்தி, மறுநாள் சிவகோசரியாரைச் சிவலிங்கப்பெருமான்பின்புறத்தில் மறைந்திருக்கும்படி கட்டளையிட்டருளி, சிவபெருமான் தமது கண்ணிற் புண்ணீர்சொரிவதாகத் திண்ணனாருக்குக்காட்ட, திண்ணனார்கண்டுபெரிது கவலுற்றுக் காளத்திநாதர் திருக்கண்ணினை யூறுசெய்த கொடியோனைக்காணின் உடனே அவனுயிரை மாய்த்து விடுவேனென்று நாற்றிசையுமோடி ஒருவரையுங் காணாது, கண்ட கண்ட இலைகளையெல்லாம் பிழிந்துவார்த்தும் அது தீரப்பெறாது "ஊனுக்கூனெனும் உரை" ஞாபகத்திற்குவரத் தமது ஒரு கண்ணினைப் பறித்து அப்ப, சரியாயிருந்தது கண்டு மகிழ்ந்து மற்றொருகண்ணும் அங்ஙனமொழுகக்கண்டு கவலைமிக்கடைந்தாராயினும் கைகண்டமுறையுள்ளதெனக் கண்ணைப் பறித்து விட்டால் இடமறிந்து அப்புதல்கூடியாதென்று, செருப்பணிந்த காலைப் பெருமான் கண்ணினருகேயூன்றிக் கொண்டுமற்றைக்கண்ணில் அம்பினை யூன்றுகையில் சிவபெருமான் திருக்கரத்தால் கையைப் பற்றிக் கொண்டு "நில்லுகண்ணப்ப" என்று தடுத்து முத்தியளிக்கப்பெற்றவர்.

கண்ணப்பமுதலியார் — மகௌதாரியப்பிரபுவும் கம்பராமாயணம்பாடுவித்தவருமாகிய திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலியாருடைய சகோதரர். இவரைப்பாடிய புலவர் கம்பரும் அவர் காலத்தவர் சிலருமாம்.

கண்ணாயிரநாதர் — திருக்காறாயிலில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கண்ணாயிரேசர் — திருக்கண்ணார்கோயில் எனும் க்ஷேத்திரத்தில் சிவபெருமானுக்குரிய திருநாமம்.

கண்ணுடையவள்ளலார் — திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அனுக்கிரகம் பெற்ற அறுபத்துநான்கு வள்ளல்களிலொருவர். ஒழிவிலொடுக்கமுதலிய நூல்களியற்றியவர்.

கண்ணுவன் — (1) ஓர்முனிவன். பூருமரபினன். அதிசாரன் புத்திரன். சகுந்தலையை வளர்த்தவன். இவன் மரபினர் காணவியர் எனப்படுவர். (2) தேவபூதியெனப்பெயரிய மகததேசராஜனுக்கு மந்திரியாயிருந்து அவனைக்கொன்று அவ்வரசுரிமையைப்பெற்றவன்.

கதம்பன் — கனகமாலையின் சகோதரரிலொருவன். [சீவக]

கதன் — யதுமரபிலுதித்த பலராமனுக்கு இளவல். இவன் தாய் ரோகிணி. தந்தைவசுதேவன்.

கதிர்காமம் — திருப்புகழ்பெற்ற சுப்பிரமணியத்தலங்களிலொன்று. இஃது இலங்கைத்தீவிலுள்ளது.

கதை — காசிபமுனிவர் மனைவியரிலொருத்தி. கொடிசெடி முதலியவற்றைப்பெற்றவள்.

கதையங்கண்ணனார் — சேய்நாட்டுச் செல்லிளைஞனைப் பாடிய புலவர்களிலொருவர் [புறநானூறு]

கத்துரு — காசிபமுனிவர் மனைவியர் பதின்மூவருளொருத்தி. தக்ஷன் குமாரி. நாகங்களைப் பெற்றவள். இவளும் இவள் சகக்களத்தியாகிய விநதையும் பாற்கடற் கரையிலே உச்சைச்சிரவத்தைக்கண்டுகளிப்புடன் வசனித்துக்கொண்டிருக்கையில், கத்துருவிநோதார்த்தமாகவிநதையே அதன்வால்கறுப்பென, விநதை அதுமுற்றும்வெள்ளையென, இருவரும் விவாதித்து, தன்சொல் உண்மையாயின் மற்றவள் அடிமையாகவென நியமனஞ் செய்துகொண்டனர். அஸ்தமித்தவுடனே கத்துரு தன்மகன் ஆதிசேஷன் பால் தன்கருத்தை வெளியிட்டு அவன் தடுத்தமையின், கார்க்கோடகன்பாலறிவிக்க, அவன் அவ்விரவிலே அப்புரவியின் வாலை நஞ்சூட்டிக்கறுப்பாக்கினமையின் மறுநாள் விநதை கண்டு நியமனப்படி அடிமையாயினள். கத்துரு கார்க்கோடகனொழிந்த மற்றையோரைச் சர்ப்பயாகத்திலிறக்கச் சபித்தனள். இவ்வரலாற்றினை விநதையிற்காண்க.

கந்தகிரி — குமாரக்கடவுள் திருவிளையாடல் புரிந்ததும், பிரமனைச் சிறை யிட்டதும், தேவர்களுடைய பூசைகொண்டதுமாகிய ஒருமலை. கைலாயத்தருகிலுள்ளது.

கந்தசாமி — முருகன்.

கந்தபுராணம் — முருகக்கடவுளின் பிரபாவங்களையும் தற்புருஷ கற்பத்து மஹாத்மியங்களையும் கூறுவது. பதினெண்புராணங்களிலொன்று. வேதவியாசர்செய்தருளியது இது சநற்குமாரர்-சூதர் - சங்கரர் விஷ்ணு - பிரமன் - சூரியனெனுமறுவர் சொல்லிய ஆறுசங்கிதைகளையும், ஐம்பதுகண்டங்களையும் இலக்ஷகிரந்தங்களையுமுடையது. இவ்வாறுசங்கிதைகளில் சூதசங்கிதையும் சங்கரசங்கிதையுமே தமிழ்ப்படுத்தப்பட்டன. சங்கரசங்கிதையில் உற்பத்திகாண்டம் அசுரகாண்டம் மகேந்திரகாண்டம் யுத்தகாண்டம் தேவகாண்டம் தக்ஷகாண்டம் என ஆறுகாண்டங்கள் காஞ்சிகுமரகோட்டத்தருச்சகர் கச்சியப்பசிவாசாரியரால் பன்னீராயிரஞ்செய்யுளாகவும், எஞ்சிய உபதேசகாண்டம் செங்குந்தமரபினராய கோனேரியப்பநாவலரால் செய்யுளாகவும் மொழிபெயர்க்கப்பட்டன. சநற்குமார சங்கிதை பல ஸ்தலபுராணங்களாகப்பிரிந்துவிட்டது. சூரியசங்கிதை முதலியன இன்னும் வடமொழியில் அச்சிடப்பட்டில. கந்தபுராணத்தமிழ்க்கவி செய்தகாலம் சாலிசகம் எழுநூறென்ப. இதனைச் சுருக்கிப் பாடினவர் பலர்.

கந்தபுராணச்சுருக்கம் — இப்பெயர்கொண்டநூல்கள் நான்குள. அவற்றுள் சம்பந்தசரணாலயராற் செய்யப்பட்ட தொன்றே சொன்னயம் பொருணயம் சொற்கட்டு திரிபுமடக்குமுதலியவற்றோடு பொருள் செறிந்து சிறிதும்சரிதையொழுகப்பெறுதுள்ளது. சஷ்டிவிரதகாலங்களிற் பலரால் இதுவேபடனஞ்

செய்யப்பட்டு வருகின்றது. மற்றவைமிகச் சுருங்கி, வேண்டியோர்வி நோதமாகக் காண்டற்கேயன்றி நன்குபயன்படுவனவல்ல.

கந்தமாதனகிரி — (1) மேருமலையின் கிழக்கிலுள்ளது (2) கந்தபுராணத்தில் வீரவாகுதேவர் எறிந்து இலங்கையிற் பாய்ந்ததாகக் கூறுங் குன்று. இது தென்னாட்டிலுள்ளது.

கந்தமாதனன் — (1) குபேரன்புத்திரன். சுக்கிரீவன் சேனாவீரரிலொருவன் (2) யதுவமிசத்து அக்ரூரன்தம்பியரிலொருவன்.

கந்தரன் — சம்பாதிமரபினன். கங்கனுக்கிளவல்.

கந்தர்ப்பன் — மன்மதன்

கந்தர்வர் — பதினெட்டுத்தேவஜாதியரிலொருசாரார் கசியபன்புத்திரர்

கந்தவதி — (1) வடமேற்றிசைக்காவலனாகிய வாயுவின் இராஜதானி நகரம (2) சத்தியவதியினாமாந்தரம். இவளே வியாசனைப்பெற்றவள்

கந்தவெற்பு — கந்தகிரியிற் காண்க.

கந்தாடையாண்டான் — வைஷ்ணவசிம்மாசனாதிபதிகள் எழுபத்துநால்வருளொருவர்.

கந்தியார் — சீவகசிந்தாமணியிற்சில செய்யுள்பலவற்றையிடைப்புகுத்தியவர். பரிபாடலிலும் அங்ஙனமே செய்தவர்.

கந்திற்பாவை — சக்கரவாளகோட்டத்திற் சம்பாபதிகோயிலின் கிழக்கேயுள்ள தூணில் மயனால் நிருமிக்கப்பட்டதொரு பிரதிமை. துவதிகனென்னுந் தேவவடிவாயுள்ளது. இது எல்லாராலும் பூசித்து வழிபாடு செய்யப்படுதலின் இதனதிட்டித்த துவதிகன் கேட்போர்க்கு இதன் வாயிலாக முக்காலச் செய்தியையுங் கூறுவன். இதனால் நாவுடைப் பாவை யெனப்படும். தூணிலிருத்தலின் கந்தென்றுங் கந்தமென்றும் பெயர்களாயின [மணி]

கந்துக்கடன் — (1) சீவகனை வளர்த்த வணிகன் (2) சீவகன் புதல்வருளொருவன்.

கபாடபுரம் — இடைச்சங்கமிருந்த நகரம். இது கடல் கொள்ளப்பட்டது.

கபாலமோசனம் — (1) காசிக்ஷேத்திரத்துள்ள ஒருதீர்த்தம். (2) இராமனாற் கொல்லப்பட்ட மகோதரனுடைய கபாலத்துண்டம் ஓரிருடி காலிற் றைக்க; அவ்விருடி வேதனையோடு சுக்கிரன் தவஞ்செய்யுமிடத்தடைய அஃதங்கே வீழ்ந்தமையின் அவ்விடத்திற்குப் பெயராயது.

கபாலி — சிவன்

கபாலீசர் — திருமயிலையில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கபிலபுரம் — கலிங்க நாட்டிலுள்ள ஒருநகரம் [சிலப்]

கபிலன் — (1) ஓரிருடி. கர்த்தமப்பிரஜாபதியின் மகன். தாய் தேவஹூதி. சகரசக்கிரவர்த்தி இந்திரபட்டத்தை விரும்பித் தொண்ணூற்றொன்பது அசுவமேதங்களை முடித்து நூறாவது செய்யத்தொடங்கி, பரியை யலங்கரித்துப் பட்டங்கட்டித் தன்மக்கள் அறுபதினாயிரவரையும் அதற்குத் துணையாக வுடன் செலுத்த, அவ்வசுவம் திக்விஜயஞ் செய்துகொண்டிருப்பது கண்ட இந்திரன் தன்பதவிக்கிடுக்கண் வந்தமை கண்டு திடுக்கிட்டு, அவ்யாகம் முற்றுப்பெறுவண்ணம் புரவியை

ப்பற்றிப் பாதலத்திற்றவஞ்செய்து கொண்டிருந்த இக்கபிலராச்சிரமத்திற் கட்டிவிட்டகல, புரவியைப் புவியெங்குந் தேடிக்காணாது பூமியைத்தோண்டிக்கொண்டு சென்று பரியையும் அருகே தவஞ்செய்யு முனிவரையுங் கண்ட சகரபுத்திரர் இம்முனிவனே யிதைக்களவிட்டவனெனக் கருதித் துன்புசெய்யத் தொடங்குகையில், முனிவர் வெகுண்டு அறுபதினாயிரவரும் கோபாக்கினியாற் சாம்பராயினர் [சகரர் தோண்டியதே சாகரம்.] சாகரம்கடல் அம்சுமான் அப்புரவியைக் கபிலர் பால் யாசித்துப் பெற்றுச் சென்றனன். பின்னொருகாலத்திற் பகீரதன்கடுந்தவஞ்செய்து அநேக கஷ்டப்பட்டு ஆகாயகங்கையை வருவித்து அவர்களுடலை நனைப்பித்து முத்திபெறச் செய்தனன். (2) தனுபுத்திரருளொருவன் (3) திருவள்ளுவ நாயனாருடைய சகோதரரிலொருவர். இவருடைய தாய் தந்தையர் நியமனப்படி இவர் பிறந்தவுடனே ஓராற்றங்கரையில் விட்டகல, திருவாரூர் வேதியரிலொருவர் வளர்க்க வளர்ந்து கடைச்சங்கப் புலவருளொருவராய்த் தமிழாய்ந்து பலநூல் இயற்றியவர். பாரியெனும்வள்ளலோடு நண்புற்றிருந்து, அவனிறந்தபின்னர் அவன் புத்திரிகளைத் தம்புத்திரிகளாகப் பாவித்து விச்சிக்கோனையும் இருங்கோவேளையும் வேண்டி அவர்கள் மணக்கத்தகுந்தமையின் பார்ப்பார்க்கு மணவினைமுடித்தவர். ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்திணையைக்குறித்த மூன்றுநூறு பாடியவர்; சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்தாற்பாடி மலையேறிக்கண்டகாணும், நூறாயிரம்பொற்காசும்பரிசில்பெற்றவர். இவர்இன்னாநாற்பது-(பதினோராந் திருமுறையில்) கபிலரந்தாதி மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை - சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை - சிவபெருமான் திருவந்தாதி முதலிய பிரபந்தங்கள் பாடியவர். பொய்யடிமையில்லாப் புலவருளொருவர். சேரமானை செல்வக் கடுங்கோவாழியாதன், வேள்பாரியே யன்றி, அகுதை - மலையமான் திருமுடிக்காரி- வையாவிக்கோப் பெரும்பேகன் - விச்சிக்கோன் - இருங்கோ வேள் முதலாயினோரையும்பாடியவர். இவர்சிறப்புக்கவி. திருவள்ளுவமாலையிலொன்றுண்டு "புலனழுக்கற்றவந்தணாளன்" "பொய்யாநாவிற்கபிலன்" என்றித்திறத்தவாக்கியங்களாற் புறநானூற்றிற் புகழ்ப்பெற்றவர்.

கபிலாசுவன் — (1) இக்ஷ்வாகு வமிசத்துக்குவலயாசுவன் புத்திரன். (2) துந்துமாரன்மகன். திடாசுவனென்றும் பெயருற்றவன்.

கபிலாச்சிரமம்- கபிலமுனிவருடைய தவச்சாலையல்லது ஆச்சிரமம். இது பாதலத்திலுள்ளது. சகரத்தீவில் கங்காசங்கம சமுத்திர பிரதேசத்துள்ள தென்றுங்கூறுவர்.

கபிலை—(1) சிந்துநதியின் ஒருபநதி. (2) தக்ஷன்புத்திரி. கசியபன்மனைவி பசுக்களைப்பெற்றவள். (3) தெய்வப்பசுவிலொன்று. (4) தென்கீழ்த்திக்கஜமான புண்டரீகத்தின் பிடி (5) கபிலகாட்டுள்ள குடிரனென

னும் அரசனுடைய இராஜதானி. இது மகதநாட்டுள்ள தென்றும் கபிலமுனிவர் ஆங்குத்தவஞ்செய்தமையின் இப்பெயரேற்ற தென்றும், இந்நகரிலேதான் கௌதம புத்தரவதரித்தனரென்றும்மணிமேகலை கூறும்.

கபோதலோமன் — யதுமரபினுதித்த விலோமன் பேரன்.

கமலக்கண்ணன் — விஷ்ணு.

கமலநாபன — திருமால்.

கமலபவன் — பிரமன்.

கமலபாலிகை — இடிம்பை.

கமலமாலதை } ஒருவித்தியாதர அர
கமலமாலினி } மபை - [சூளாமணி.]

கமலாக்ஷன் — (1) திருமால் (2) திரிபுரரிற்காண்க. [பூசித்தவிடம்.

கமலாலயம் — திருவாரூர்-திருமகள்

கமலை — (1) திருமகள் (2) விமலைதாய் [சீவகசிந்தா]

கமலைபீடம் — அறுபத்துநான்கு சததிபீடங்களிலொன்று. இது கமலாலயத்திலுள்ளது.

கம்சன் — உக்கிரசேனன்மகன் [எனினும், உக்கிரசேனன் மனைவி தோழிகளுடன் வனத்திற் செல்லுகையில் வழிதப்பிமாறி, தோழிகளைப்பிரிய அச்சமயம் ஓரரக்கன் பலாத்காரமாகப் புணரவுதித்தவன்.] மதுராபுரத்தரசன். கிருஷ்ணனுக்குமாதுலன். இவன் ஜன்மாந்தரத்தில் காலநேமி யெனு மரக்கனாதலின் அவ்வாசனையால் தேவரை இம்சித்துவந்து, தன் தங்கை தேவகியை வசுதேவருக்கு மணவினைமுடிப்பித்து இரதத்திற்கொண்டு வனங்காணச் சென்றபொழுது 'உன்தங்கை மகவினாலிறப்பாய்' என்ற அசரீரியைக் கேட்டு உடனே நகரமடைந்து தங்கையையும் மைத்துனனையுஞ் சிறையிலிட்டுப் பிறக்கும் பிள்ளைகளையெல்லாங்கொன்றனன். முடிவில் கண்ணன் தன்மாயாசத்தியால் நந்தகோபரையடைய, இவன் பலவகை யுபாயஞ்செய்துங் கண்ணனைக்கொல்ல முடியாமல் இறுதியில் கண்ணனாலேயே கொல்லப்பட்டவன்.

கம்சாராதி — கண்ணன். கம்சனைக் கொன்றமையாலடைந்த பெயர்.

கம்சை — உக்கிரசேனன புதல்வியரில் மூத்தவள்.

கம்பர் — சோழநாட்டுத் திருவழுந்தூரிற் பிறந்தவர். திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலியாரால் ஆதரிக்கப்பட்டவர். அவர் விரும்பிய படியே இராமாயணத்தைத் தமிழ்ப்படுத்தி அரசனவைக்களத்தே அரங்கேற்றியவர். [இராமாயணத்திற்காண்க.] இவர்கவி ஆழ்ந்த கருத்துடைமையில் மேம்பட்டது. கல்வியிற் பெரியர் கம்பரென மேதாவிகளாலேயும் புகழ்ந்து சொல்லத்தக்கவர். இவர் சகாப்தம் எண்ணூற்றேழிலிருந்தவராக இராமாயண அரங்கேற்றுஞ் செய்யுளானறியத்தகும். இவர் ஏரெழுபது திருக்கைவழக்கமெனும் வேளாண் சிறப்பு நூல்களையுஞ் செய்தவர் இவர் மகன் அம்பிகாபதி இவர்காலத்துப் புலவர் ஔவை புகழேந்தி ஒட்டக்கூத்தர் முதலியோர், இவரை வரகவிகளிலொருவரென்ப. இவர் வேளாளரைப் பாடிய வாயால் வேத்தரையும் பாடேனென்ற வைராக்கியமுடையவர். இக்காரணமாகச் சில

யெழுபதெனும் வன்னிய ஜாதி நூல் செய்ததாகச் சிலர் சொல்லுகின்றனர்.

கம்பளச்செட்டி — கப்பல்யாத்திரை செய்யுமோர் வணிகன். பீலிவளை யென்பாள் தான்பெற்ற குழந்தையை நெடுமுடிக் கிள்ளியினிடஞ் சேர்ப்பிக்கும்படி இவனிடத்தே தான் ஒப்பித்தனள் [மணி.]

கம்பளபர்கிஷன் — அந்தகன் மகன். யதுமரபினன்.

கம்பை — ஒருநதி. இதுகாஞ்சிநகரத்திலுள்ளது.

கயவாகு — சிலப்பதிகாரக்கதை நிகழ்கையில் இலங்கையரசனா யிருந்தவன். இவனே முதன்முதல் கண்ணகிக்கு இலங்கையிற் கோயில்கட்டுவித்தது திருவிழாநடாத்தியவன்.

கயன் — (1) உன்முகன் புதல்வனாகிய அங்கனிளவல். (2) பிரியவிரதனவமிசத்து நக்தனபுத்திரன். ஐந்நூறு அசுவமேதஞ்செய்து இந்திரனானவன். ஒருசக்கரவர்த்தி (3) அமூர்த்தரஜன் புத்திரன். பலயாகங்களியற்றி ராஜரிஷியானவன் இக்கயன் யாகம் புரிந்தவிடத்தையே கயையெனக்கூறுவர். (4) சுக்கிரீவனசேனாவீரரிலொருவானரன்.

கயாகரன — திவாகரன்மகன் தம்பெயராற் கயாகர நிகண்டுசெய்தவன்

கயிலாசநாயகி — திருக்காறாயிலில் உமாதேவியார் திருநாமம்.

கயிலாசம் — சிவலோகம்

கயிலைபாதி காளத்திபாதி—நக்கீரதேவநாயனாரால் அருளிச் செய்யப்பட்ட நூறுவெண்பாக்களை யுடைய நூல். இதுமாறிமாறி ஒவ்வொரு வெண்பாவாற் கயிலையையுங் காளத்தியையுந்துதிக்கது.

கயை — காசிப்பதிக்கருகிலுள்ள ஒரு புண்ணியஸ்தலம். இங்கே பிதிர்க்குப் பிண்டமிடுவது சிறப்பு அதனால் முக்தியுண்டாமென்பதுபுராணசம்மதம். இதனருகே அக்ஷய வடமெனும் ஆலமரமொன்றுண்டு.

கரதோயம் — ஒருநதி. வங்கதேசத்துள்ளது. இது உமாதேவி திருமணத்திற சிவபிரான் திருக்கரததினின்றபெருகினது.

கரந்தமன — யயாதிபுத்திரனான துர்வசனுடைய பௌத்திரனுக்கு மகன். இவனுக்கு ஜலாஸ்வனென்றும் நாமாந்தரம் பலபராக்கிரமவானாகி அரசுபுரிந்துகொண்டிருக்கையில், சத்துருக்கள் தன் நகரத்தை முற்றுகைசெய்ய, ஒன்றுந்தோன்றாது ஏகாந்தமாயிருந்து இருகரங்களால் முகத்தையும் மூக்குகளையும் மூடிக்கொண்டு கடவுளைச்சிந்தித்திருப்ப, இவனது விரல்நடுவினின்றுண்டான சுவாசத்தினின்றெண்ணிறந்த சைநியங்கள் தோன்றிச் சத்துருக்களை யழிக்கப்பெற்றவன். இவன மகன் அவீக்ஷித்து.

கரபதி — (1) சகுனிபுத்திரன். (2) குந்திதேவியின் நாமாந்தரம்.

கரவீரேசர் — திருக்கரவீரத்திற்சிவபிரான் திருநாமம்.

கரன்—விச்சிரவாவுக்குச் சாகையென்பாளிடம பிறந்த மூவருள் மூத்தவன். இவன்தம்பியர் தூஷணன் திரிசிரன். ஜனஸ்தானத்திற சேனாபதியாயிருந்து இராமனாற் கொல்லப்பட்டவன்.

கராடிகள் — மகாராட்டிர தேசத்துள்ள ஒருஜாதிமனிதர்.

ருடைக்கை அமுதகலசத்தைக் காத்திருந்தோரைவென்று அதனைக்கொண்டு வருகையில திருமால எதிர்ப்ப, இருபத்தொருதினங்களா போர்செய்து தோல்வி யடையாமையின் திருமால் வஞ்சனையால் வெல்லக்கருதி உனக்குயாது வரம் வேண்டுமெனவினவ, கருடன்வன க்கு நீயாதுவரங்கொடுப்பது உனக்கு நானே வேண்டுமோகிற்றருவல்என க்கூற "தூயை யோதிய சொற்றவருவெனில், நீயெனக்கு நெடுநாள் கை யூர்தியாய், எபு மீம்வரம் யானொளா கல்கெனருன"—[காஞ்சி புராணம்] இதனால் திருமாலுக்கு வாகனமானவன். அமுதகலசத்தை கொண்டுவந்து தாயின சிறையை நீத்தவன். அக்கினி தேவன்மகள் சாண்டிலி யென்டாள் இமாசலக் குகையில் தவஞ் செய்யக் கண்டு யோசித்துச் சிறகிழந்து மீண்டும அவளருளாற்பெற்றவன். [சைவபு]

கருடாங்கதன் — கிருதமாதனத் தாசன். [சூளா]

கருடாந்திக மூர்த்தி — சிவமூர்த்தங்கள் அறுபததுநான்கனுளொன்று. திருமால்கைலாயத்திற் சிவதரிசனத்திர்குச் சென்று நெடுநேரம் வெளிவராதிருந்த பொழுது கருடன சிவபெருமானை இகழ்ந்துரைப்பக் கேட்ட திருநந்திதேவர் கோபததால் உசுவாசநிசுவாசங்களைச் செய்ய, நாசிகாபுடத்திற்கும் ஆகாயத்திற்குமாக அலைப்புண்டு நாராயணனைப் பிரார்த்திக்க நாராயணனால் அதுதவிர்க்கப் படாமைகண்டு அநுக்கிரகித்துக் கருடனுக்குயிர் தந்தனுப்பி யசிவமூர்த்தி.

கருணாகரத்தொண்டைமான் — கலிங்கத்துப் பரணியிற் சிறப்பித்துக் கூறப்பட்ட ஒருசிற்றரசன். தஞ்சையில் சாமந்த விண்ணகரெனற ஒரு விஷ்ணுகோயி லெடுப்பித்து, சாமந்தநாராயண சதுர்வேதி மங்கலமென்ற ஒரு கிராம முண்டாக்கி அககிராமத்தில வியாக்கியாதாக்களாயிருந்த சதுர்வேதி பட்டர்கள் நாற்ற்றுபேருக்கு விருத்திகளைநியமிததவன்.

கருணிகாரவனம் — ஒருவனம். மேருமலைக்கருகேயுள்ளது.

கருணிகை—(1) ஓரப்சரசு (2) அனசன்மனைவி.

கருணைநாயகி — திருமாற்பேற்றிலே உமாதேவியார் திருநாமம்.

கருணைப்பிரகாசர் — துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள்சகோதரரிலொருவர்.

கருத்தமன் — ஒருமுனிவன். கபில முனிவர்பிதா.

கருநாடகம் — திரவிட ஆந்திரதேசங்கட்கு மேற்புறததுள்ள தேசம். இது கன்னடமெனவும்வழங்கும்.

கரும்படுசொல்நாயகி — திருப்புறம் பயத்தில் உமாதேவியார்திருநாமம்.

கரும்பனூர்கிழான் — ஒருவேளாண்பிரபு. வேங்கடநாட்டினன், நன்னுகராற் பாடப்பட்டவன் [புறநா]

கரும்பன் — ஒருவேளாண்பிரபு. தன் தோட்டத்தில் விளைந்தகரும்பைப் பலரும் சொந்தமாகத் தின்னுகவெனநியமிக்க அவ்வாறு வர ஒப்பாதசிலர்க்குக்கூலியுங்கொடுத்துத் தின்பித்தவன [தொண்டைமண்டலசதகம்]

கருவூர் — சேரர் இராஜதானி-இவர்

களென்று சோழரும் அரசபுரிந்தவிடம் - இதுவஞ்சி நகரமென்றும பெயர்பெறும்.

கருவூர்க்கதப்பிள்ளை — நாஞ்சில்வள்ளுவனைப்பாடிய புலவர் [புறநா]

கருவூர்க்கதப்பிள்ளைசாத்தனார் — பிட்டங்கொற்றனைப் பாடியபுலவர்.

கருவூர்த்தேவர் — திருவிசைப்பாவியற்றியவருளொருவர் இவர் கருவூரிலே அந்தணர் குலத்துதித்து உலகாயதமுதலிய பலசமயங்களுமாய்ந்து சைவமே சற்சமயமென்றுணர்ந்து வைதிகசைவநெறியினின்றவர். சிவயோகங் கைவந்த சித்தர் போகமுனிவர்மாணவர் இவர் காமியாதலின மதுவுண்டு பவரெனச் சிலபுன்மதி வேதியர்கள் அவர்களுக்கு மதியூட்ட அகாலத்தில் மழைபொழிவித்தும், நதியைப்பெருக்கியும், திருக் கோயிலின திருக்கதவைத்திறப்பித்தும், பூதங்கள் குடைபிடித்து வரச்செய்தும் அற்புதங்காட்டிக்காடுமலைமுதலிய விடங்களிலும் பலபுண்ணிய பூமிகளிலும் சிவதலங்களிலும் சஞ்சரித்து வந்து தாமிரபர்ணி நதிதீரத்திலே குருகூரென்னும வைணவாலத்தையடைவாராக, திருமால் அதன் முன்னரே அடியவர் கனவிற்றோன்றி அவரையுபசரிக்கச்செய்தனர். நெல்லையப்பர் நேரேதரிசனங்கொடுக்கப்பெற்றவர். அதன் மேற்கே ஒருகுரோச தூரத்திற்கண்ட சிவலிங்கத்தை யன்பாற்றழுவிக்குழைவித்தவர். திருப்புடை மருதூரில் சிவபிரானையழைத்துத் தரிசனங்கொடுக்கப்பெற்றவர். முன்றீசரை வணங்கி மதுவேண்டுமெனக் கேட்டுக் சாளிகொண்டுவந்து கொடுக்கப்பெற்று, கருமயோகிகளை நோக்கிமீன்கொண்டுவருகவென, அவர்கள் கிடைக்கப்பெறாது கூற, அருகிருந்த வன்னிமரத்தை நோக்கி மீன்மாரிசொரிகவென்று அங்ஙனமேசொரிவித்து அவர்களைநோக்கி நீங்கள் இவ்வாறு செய்யாது மதுவருந்த லெனனையென, அவர்கள் முதலில் நெற்றியையருளாக வெனைப் பொதியமலைக்கு வரககட்டளையிட்டுச்சென்று, ஒருவிஷ்ணு வாலயத்தில் நாரணனைவிளித்து, விரைந்து வாராமையின் வெகுண்டு நீபூசையறுகவெனச் சபித்துவிட்டுப் பொதிகையடைந்து அகத்தியரைத் தரிசித்து அங்கொரு சாரிருக்கையில், தஞ்சையிற் சோழராசன்சமைத்த பெரியதோராலயத்தில் சிவப்பிரதிட்டை செய்யப்படலவாறு முயன்றும் மருந்திளகிப் பந்தனமாகாது வருந்த, ஆகாசவாணியால்கருவூர்த்தேவர் வந்தாலன்றிக் காரியஞ்சித்தியாதென வுணர்ந்து வருந்த, அங்கிருந்தப் போகமுனிவர் சீட்டொன்றெழுதிக் காக்கையின்காலிற்கட்டிவிடுத்துக் கருவூர்த்தேவரை வருவிக்க, தேவர் போதர முதலியோரனுமதிகொண்டு ஆலயத்தினுட்சென்று சிவலிங்கப்பெருமானை ஆவுடையாருடன் சேர்த்து நிறுத்தித் தமதுவாய்த்தம்பலத்தையுமிழ்ந்து பந்தனமாகிப் பசும்பொன் னுருக்கியமைத்ததுபோலிருத்தல் கண்டு யாவரையும் மகிழ்வித்தவர்.

பின்னர், தேவர் திருவானைக்காவைப்பணிந்து திருவரங் கத்தையடைய அங்கிருந்த பொதுமடந்தை

முருகிப்பாடியவர்.

**கருசன்** — வைவசுவத மநுவின் புதல்வருளொருவன். இக்ஷ்வாகு வுக்கிளவல். இவன்வமிசத்தவர்காருசர்

**கரையேறவிட்டநல்லூர்** — திருப்பாதிரிப் புலியூரகருகே கெடிலநதி தீரத்துள்ளது. திருநாவுக்கரசு சுவாமிகளைச் சமணர் கடலிலிட்ட பொழுது சிவபிரான்கரையேற்றியவிடமிதுவே.

**கர்க்கடன்** — ஓரரக்கன். புஷ்கலி கணவன். கர்க்கடியின்பிதா. இவன் சுதீக்ஷண னென்னும் இருடியைரதின்னச்சென்று அவரால்தன்மனைவியுடனசாமபராயினவன். [சைவபு]

**கர்க்கடி** — ஓரரக்கி. கர்க்கடனுக்கும் புஷ்கலிக்கும்பிறந்தவள். காமரூப தேசத்திற் கும்பகர்ணனைக் கூடிப் பீமனென்பவனைப் பெற்றவள். இவளுக்கு முதற்கணவன் விராதன்.

**கர்க்கடேசர்** — திருந்துதேவன்குடியிலே சிவபெருமான்றிருநாமம்.

**கர்க்கன்** — (1) யதுமரபினோர்க்குப்புரோகிதன். பலராமகிருஷ்ணனுதியர்க்கு நாமகரண முதலியன செய்தவன். (2) புமன்னியன்புத்திரன். சினிதந்தை.

**கர்ணகி** — நருமதைநதிதீரத்திலுள்ள ஒருபுண்ணியநகரம் [சைவபு]

**கர்ணன்** — இடையெழு வள்ளலுளொருவன். குந்தி தன கன்னிப் பருவத்தே துர்வாச முனிவரிடம் பெற்ற மநுவினைப் பரீக்ஷித்துச் சூரியனைக்கருத, சூரியன் பிரசன்னமாய்க்கூடிப்பெற்றபுத்திரன். [கன்னிப் பருவத்துப் பிறந்தமையின் கானீனனெனப்பட்டவன்.] குந்தி நாணங்கொண்டு பிறரறியாமேயொரு பேழையிலிட்டுயமுனையாற்றில் விட, அத்தன் துறையொன்றில்மனைவியுடன் நீராடிக் கொண்டிருந்த அதிரதசாரதி கண்டெடுத்துப் போற்றிவளர்த்ததனால் அதிரத புத்திரனென்றும், அதிரதன் மனைவி இராதையால் வளர்க்கப் பட்டமையின் இராதேயனென்றும், கவசகுண்டலங்களோ டுதித்தமையின் கர்ணனென்றும், வசுவர்ம [பொற்கவச]தரனாதலின் வசுசேன னென்றும், பெயர்களையுடையான். துரோணரையடைந்து வில்வித்தை கற்பிக்க வேண்டி அவர் பிராமணர் க்ஷத்திரியரல்லாதார்க்குப் பயிற்றேனென மறுக்க, அந்தணவடிவேற்றுப் பரசுராமரிடம் பயின்றவன். இவன் தன்னைவஞ்சித்ததாக, கற்றானென்பதுணர்ந்த பரசுராமர் சமயத்தில் இவ்வித்தை பயன்படா தொழிகவெனச் சபிக்கப்பெற்றவன். அர்ச்சுனன் தனக்குச் சமானமான வில்லாளியெனப் பகைகொண்டிருந்ததுணர்ந்து இவனை துரியோதனன் தனக்குரிய நண்பனாக் கொண்டனன். மிக்க கொடையாளி. இந்திரன் தன மகன் அர்ச்சுனனுடைய க்ஷேமத்தைக் கருதியாசிக்க, கவச குண்டலங்களைத் தானஞ் செய்தவன். கண்ணனுக்குப் புண்ணியங்களையெல்லாம் கொடுத்தவன்.

**கர்தமப்பிரஜாபதி** — பிரமன் சாயையிலுதித்தவன். இவன்மனைவி தேவஹூதி. புத்திரன் கபிலன்.

**கர்மப்பிரமவாதி** — கர்மமேகடவுளென்னுமதத்தைக் கைக்கொண்டவன்.

**கர்மம** — இது ஆகாமியம் சஞ்சிதம் பிராரப்தமென மூவகைப் படும்.

இவையே சுகதுக்கங்கட்கும் அவற்றை நுகர்தற்கேதுவாகிய பிறப்பிற்குங் காரணம். இவை நசிப்பிற்பிறவியுநசிக்கும். பிறவிநசிப்பின் முத்தியைக் கூடும்.

கர்மியன் — காந்தாரி மகன்.

கலசகண்டகி - காலகேசிகன் மனைவி.

கலசங்காத்தவரதேசர் — திருமாகறலில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கலசபவன் — (1) அகத்தியன் (2) வசிட்டன் (3) துரோணன். [கலசம்=குடம், பவன்=ஜனித்தவன்.]

கலாதத்துவம் — வித்தியாதத்துவத்தின் மேலுள்ளது. ஆன்மாவைச் செயலிற்களிம்புபோல மறைத்திருக்கும் மலவிருளைச் சிறிது விலக்கி ஆன்மசொரூபத்தை ஒருவாறுபுலப்படுத்துவது.

கலாநிதி — சந்திரன்.

கலாபம் — வரருசியாற் செய்யப்பட்ட வடமொழி இலக்கணநூல்.

கலாவதி—(1) காசிராஜனமகள். மதுரையையாண்ட யதுகுலமன்னனான தசாருகனை மணந்து அவனைசேருகையில் தீக்ஷையில்லாதவனென விலக்கி, கர்க்க ருஷியினிடம தீக்ஷைபெற்று வந்தபின் கூடிவாழ்ந்தவள். (2) காசிப்பட்டங்கணைடுஆணைடுற்று முத்தியடைந்தவள்.

கலி — (1) சனிபகவான் (2) கலியுகத்திற்கு அதிதேவதை (3) கபாடபுரத்திருந்த இடைச்சங்கப் புலவரியற்றிய தொரு தொகை நூல். கலித்தொகையிற் காண்க.

கலிக்கம்பநாயனார் — அறுபான்மும்மைநாயனமாருளொருவர். கடந்தைநகரில் வைசியகுலத்துதித்துச் சிவனடியாரைப்பாதபூசைசெய்துண்பித்துவருந் தொண்டினைமேற்கொண்டவர். இவருடைய ஏவலாளனொருவன் இவரை நீங்கியடிவருடன் கூடியொருநாள் திருவமுதக்குவர, பாதபூசை செய்துவரும் வரிசையில், அவர்மனைவியர் இவன் நம் ஏவலனெனக் கருதிநீர்பொழியாதிருக்கக்கண்டு அவர் கையினை வெட்டி முத்தியடைந்தவர்.

கலிங்கதேசம் — ஒட்டிர தேசத்தின் தெற்கும் கருநடதேசத்தின் வடக்குமுள்ளதொரு தேசம்.

கலிங்கத்துப்பரணி— "பரணிக்கோர் சயங்கொண்டான்" என்று புகழப்பட்ட சயங்கொண்டானென்பவராற்செய்யப்பட்டது. இதில் அநேக சோழர்களுடைய வரலாறுகள் காணப்படும். சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்குநல்லார் தமதுரையில் எடுத்தாண்டிருத்தலின் அவர் காலத்திற்கு முற்பட்டதெனத் தெரியவருகிறது.

கலிங்கன் — பலியின் மூன்றாம் புத்திரன். இவனாலேயே கலிங்கதேசமென வழங்கலாயிற்று.

கலித்தொகை — எட்டுத்தொகையுள் ஆறாவது. கடைச்சங்கப் புலவராற் செய்யப்பட்டது. இதற்குநச்சினார்க்கினியருரைசெய்தனர். இது கடவுள் வாழ்த்துட்பட நூற்றைம்பது கலிப்பாக்களையுடையது. குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் பாலையென்னுமைந்திணைக்குமுரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருளென்னும் மூவகைப்பொருள்களையும் விளக்கி அகப்பொருட்பகுதிகளை விரித்துக் கூறுவது.

அவ்வச்செய்யுளைச்செய்தார்பெயர் அறியக்கூடவில்லை. இது குறுங்கலித்தொகையென்றுங் கலியென்றும் பெயர் பெறும்.

கலியநாயனர் — (1) அறுபான்மூம்மைநாயனமாருளொருவர். தொண்டைநாட்டி லுள்ள திருவொற்றியூரிலே செக்கார் மரபிலே யவதரித்தது தியாகேசராலயத்தில் திருவிளக்கிடுதலே தொண்டாகக்கொண்டு தமதுசெல்வ முழுவதையுஞ் செலவிட்டு வறியராய்த் தமது மனைவியை விற்கப்புகுந்து வாங்குவாரின்றி ஊட்டியை யரியத்துணிந்த பொழுது சிவ பெருமானல் முத்திபளிக்கப்பெற்றவர். (2) எண்ணெயகப்படாத காலத்தில் தமது திருத்தொண்டு முட்டுப்படுதல்சகியாது தலைமயிரைக் கொளுத்திக் கொண்டு முத்தியடைந்த ஒருவீர சைவர்.

கலியுகம் — சதுர்யுகங்களில் நான்காவது இதுவே யிப்போது நிகழ்வது. இதற்கு வருஷசங்கியைநான்குலக்ஷத்து முப்பத்தீராயிரம். இதிற் சென்றது 5005. இவ் யுகத்தில் தருமதேவதை நான்கு கால்களில் மூன்றுகால்கள் நொண்டியா யிருக்குமென்றும் அதர்மங்கள் அதிகரிக்குமென்றும், அவை வருட மேற வேற விபரீதமாகு மென்றும் நூல்கள் கூறும்.

கழுமுவேகன் —காந்தர்வதத்தைதந்தை. வெள்ளிமலையிலுள்ள வித்தியாதரராஜன் [சீவக]

கலை — (1) கலைஞானம் அறுபத்துநான்கு (2) சந்திரகலை பதினாறு. அவை பிரதமை முதற் பூரணைப் ரூமைப் பிரதமை முதல், மூன்றுயே அக்கினி ஆதித்தன் விசுவேதேவர் வருணன் வஷட்காரம் வாசவன முனிவர் ஏகபாதசிவம் யமன் வாயு பார்வதி பிதிரர் குபேரன் சிவன இவர்களும் பூரண கலையைப் பிரமதேவனும் மீற்றைய ஒரு கலையைச் சாதிரனும உண்பர்.

கலைக்கேதத பிரமையர் — சிவபக்தரிலலந்தோறுஞ் சென்று யாசித்து அடியார்க் கமுது செய்வித்து வந்தவர் தரித்திர ரொருவர்க்குத் தமது கையிலிலந்தி யிருந்த கலைக்கோட்டைத் தட்டி அளவிறந்த செல்வமளித்தவர். இவர் வீர சைவர். †

கலைக்கோட்டு முனிவர் — இருசியசிருங்கரிற்காண்க.

கலைஞானம்—அக்கரவிலக்கணம், இலிகிதம, கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், சகுனசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம் சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரதபரீட்சை, கஜபரீட்சை, அசுவபரீட்சை, இரத்தினபரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராமவிலக்கணம, மல்லயுத்தம், ஆகருடணம், உச்சாடனம, வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கௌத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம்,

ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கனனத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம் எனும் அறுபத்து நான்குமாம்.

கலைநியமம் — தென்மதுரையிலுள்ள சிந்தாதேவியின் கோயில். எல்லாச் சமயத்தாராலும் புகழப்பட்டுக் கலாரூபியான சிந்தாதேவிக்கு இடமாகலின் இப்பெயர் பெற்றது. இக்கோர் அம்பலப் பீடிகையில் பலரும்வந்து தங்கும் வழக்கப்படி ஆபுத்திரன் இங்கிருக்கையிலே தான் அமுதசுரபியைப் பெற்றான் [மணிமே] [காணக.

கல்மாஷபாதன் — கன்மாடபாதனைக்

கல்யாணசுந்தரர் — (1) சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுளொன்று. சிவபெருமான் உமாதேவியாரை மணந்த திருக்கோலம் (2) திருவேள்விக்குடியில் சிவபிரான் திருநாமம்.

கல்லாடம் — கடைச்சங்கப் புலவருளொருவரும் தொல்காப்பிய உரையாசிரியர்களிலொருவருமான கல்லாடரென்னு நல்லிசைப் புலவரியற்றியது. நூற்றிரண்டு அகவற்பாக்களடங்கியது. இந்நூலைப் பற்றிக் 'கல்லாடங்கற்றவனோடு சொல்லாடலாகாது' என ஒரு பழமொழியும் வழங்குகிறது.

கல்லாடனார் — கடைச்சங்கத்திருந்த நல்லிசைப் புலவருளொருவர். "ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத்திற்— குரையிடையிட்ட விரகர் கல்லாடர்" எனப் புகழ்ப் பெற்றவர். இவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனை - அமபர்கிழான்-அருவந்தை - பொறையாற்றுக் கிழான் முதலியவர்களைப் பாடியவர். பதினோராந்திருமுறையில் கண்ணப்பதேவர் திருமறம் என்னும் பிரபந்தமும் தம்பெயரால் கல்லாடமென்னும் 102 அகவற்பாக்களை யுடைய நூலுமியற்றியவர். திருவள்ளுவமாலையில் இவர்கவியுமுள்ளது. "சமயக்கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருளிது வென்ற,வள்ளுவனறனக்கு வளர்கவிப் புலவர் முன், முதற்கவிபாடிய முக்கட்பெருமான்" என்னுங் கல்லாடவாகவியங்களால் பல்வேறு சமயவாராய்ச்சியுடையாரென்பது புலப்படும். இவரது சிவபத்தியின் மிகுதி கல்லாடத்திற்பல அகவல்களிற் பரக்கக்காணலாம். அந்நூலிலே மாணிக்கவாசகர் சரிதங்களைக் கூறியிருத்தலாலும் கண்ணப்பதேவர் திருமறமியற்றி யிருத்தலாலும் அவ்விருமூவோருக்கும் பிற்காலத்தவரென்பது துணிபு.

கல்விநோகர் — நாயினைக் கொண்டு வேத மோதுவித்து அந்தணரையவமானப் படுத்திய ஒருவீரசைவர்

கவந்தன் —(1) தனுவென்னுங் கந்தர்வன் தபோபலத்தால் இச்சித்த வடிவமெடுக்கவரம்பெற்றுச் சிரஞ்சீவியாய்க் கோப சிரேஷ்டனாயிருக்கையில், ஸ்தூலகேச னென்னும் ருஷிசாபத்தால் இராக்கதரூபம் பெற்றுப் பின்னர் இந்திரனோடு பொருது அவன் வச்சிராயுதத்தாற்

தலையுங்காலும் வயிற்றிற் புதையுமாறுதாக்கப் பெற்றக் கவந்தனானவன். சீதையைத் தேடிக்கொண்டு தண்டகாரணியத்தில் வந்த ராமலக்ஷ்மணரை உட்கொள்ள யத்தனித்து அவர்களால் புஜங்கள் சொய்யப்பெற்றுப் பண்டைய கந்தர்வவடிவேற்றுச் சென்றவன். (2) கும்பாண்டன். வாணாசுரன் மந்திரி.

கவாக்ஷன் — சுக்கிரீவன் சேனாவீரரிலொருவானரன்.

கவி — (1) பிரமன (2) சூரியன் (3) சுக்கிரன்பிதா (4) சுக்கிரன் (5) இருக்ஷயன் புத்திரன் (6) இக்ஷ்வாகு தம்பி. இளமையிலிறந்தவன.

கவிசாகரப்பெருந்தேவனார் — கடைச்சங்கப் புலவருளொருவர் திருவள்ளுவமாலை சொல்லியவர்களிலொருவர்.

கவிராஜகேசரி திருமேனி இரத்தினக்கவிராயர் — மாறனலங்காரத்திற்கு உரையும், திருக்குறள்பரிமேலழகருரைக்கு நுண் பொருண்மாலையுமியற்றியவர்.

கவுணியனார் — (1) திருஞானசம்பந்தஸ்வாமிகள் (2) கடைச் சங்கப் புலவருளொருவர். திருவள்ளுவமாலை பாடியவருளொருவர்.

கவுந்தி — ஜைன மதத்தினளாய ஓர் தவமுதியாள். கோவலனுங் கண்ணகியும் மதுரைக்குச் செல்கையில் அவர்கட்கு வழித்துணையாகச் சென்று இடையிலவர்களையவமதித்துப்பேசியஇருவரை நரியாகச் சபித்து மதுரையடைந்தபின் கண்ணகியை மாதரியிடம் அடைக்கலமாகத் தந்தவள். [சிலப்]

கவுரி — பார்வதி. சிவபெருமானார் ஒருகாலத்தில் பார்வதியைநோக்கி காளி! [கறுப்புநிறமுடையவளே] எனவிளிப்ப, அம்மை மனஞ்சகியாது உத்தரவு பெற்றுத்தவஞ்செய்து சிவகடாக்ஷத்தினால் கவுர [பொன்] நிறமடைந்தமையின் இப்பெயரேற்றனர்.

கவுரியம்மை — திருக்கேதாரத்திலே உமாதேவியார் திருநாமம்

கவேரபத்திரி — காவிரிநதி.

கவையாக்கன — சுக்கிரீவன் சேனாவீரரிலொருவன்.

கழறிற்றறிவார்நாயனார் — அறுபான்மூன்று நாயன்மார்களிலொருவர் சேரர்குலத்திலே பெருமாக்கோதையாரெனத் தோன்றி இளமையிலேயே துறவுடையராய்த்திருஅஞ்சைக்களத்தையடைந்து சிவபணிவிடைசெய்துவருகையில், சேரன் அரசை வெறுத்துத் தபோவனமடைய மந்திரிமார் வேண்டுகோளின் மேல் சிவாஞ்ஞைபெற்று மன்னரானவர். பிறர் கூறியதை அறியும் வல்லபம் இறைவனிடம் பெற்றமையின் கழறிற் றறிவாரெனும் பெயரேற்றவர். உவர்மண்ணூறிய வுடம்பினராக வொருவண்ணானை எதிர்வரக்கண்டு [illegible]னஞ்செய்த சிவனடியாரென்று நமஸ்கரித்தவர். சிவபிரான் பாணபத்திரருக்காகத் திருமுகமெழுதி யனுப்பப் பெற்றவர். சேரமான் பெருமானாயனாரெனும் பெயர் வகித்தவர். சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளானையிவர்ந்து கைலைக்குச்சென்றபோது குதிரையூர்ந்து உடன் சென்றவர். திருவாரூர் மும்மணிக் கோவை பொன்வண்ணத்தந்தாதி திருக்கை

லாசஞானவுலா முதலியன பாடிய வர். இவர் சேரமான்மாவெணகோ வெனப்புறநாநூற்றிலே பாடப் பெறறவர். இவர் குதிரை வாகனப் பிரியராதலின் இப்பெயர்பெற்றார் இவர்க்குமுன் அரசியற்றியசேரன் செங்கோற் பொறையன்.

கழற்சிங்கநாயனார் — அறபான்மு ம்மை நாயன்மார்களி லொருவர். காடவர் குலத்தவர். அரசுரிமை தாங்கியிருக்கையில் மனைவியுடன் திருவாரூர்க்குச்சிவதரிசனஞ்செய் ய்துவரச்செல்ல, சிவார்ச்சனைக்கு வந்திருந்தமலர்களிலொன்றைஅவ ர்மனைவியார் மோந்த குற்றத்திற் காக அவர் மூக்கினைச் செருத்து ணையார் ரரியக்கண்டு, கையுங் குற் றமுடைய தென்று அவர்கரத்தை வாளாற் கண்டித்துச் சிவபதவி ய டைந்தவர்.

கழாத்தலையார் — சேரமான் குடக் கோநெடுஞ்சேரலாதனும், சோழ ன்வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்க்களத்துப்பொரு துவீழ்ந்துகிடந்ததுகண்டுஅவ்விரு வர் பெருமையையும்அவர் மனைவி யர் துன்பத்தையுமெடுத்துப்பாடிய புலவர். இரு சேரமான் பெருஞ் சேரலாதனையும் பாடியவர். இருங் கோவேளின் முன்னோரிலொரு வன் இவரையிகழ்ந்தமையின அந்ந கரம் அழிவுறறது. [புறநா]

கழாரம்பனார் — அகஸ்தியர்மாணாக் கர் பன்னிருவரிலொருவர்.

கழுமலம் — சீகாழிப்பதியின் பன் னிரு திருநாமங்களிலொன்று

கழைதின்யானையார் — தாம்வளர்த்து செல்லும் யானைக்குக் கரும்பே யுணவாகக் கொடுத்து வந்தமை யின் இப்பெயரேற்றார் வல்விலோ ரியைப் பாடியபுலவருளொருவர்.

களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல் - ஒருசேரராசன். எட்டுத்தொகையு ளொன்றான பதிற்றுப் பத்தில் நான்காம் பத்தினைத்தன்மீது பாடி யகாப்பியாற்றுக் காப்பியனாருக்கு நாற்பது நூறாயிரம்பொன் ஒருங்கு கொடுத்துத்தான் ஆள்வதிற்பாகங் கொடுத்தவன். இருபத்தைந்தியா ண்டு அரசுவீற்றிருந்தவன்.

களத்தூர்க்கிழார் — கடைச்சங்கப்புல வருளொருவா. திருவள்ளுவமாலை க்குத் தகைவிகொடுத்தவர். அக்க வியில் வள்ளுவனாரைவைதிகசமயி யென்றவர்.

களரியாவிரை — தலைச்சங்கப்புலவ ரியற்றிய வொருநூல். இவ்வப்பதி காரவுரையிற் கண்டது.

களர்முலையீசர் — திருக்களரியில் சிவபிரான் திருநாமம்.

களவழிநாற்பது — சங்கமருவிய பதி னெணகீழ்க் கணக்கினிலொன்று. செங்கட்சோழன்,சேரமான்கணைக் காலிரும்பொறையைச் சிறையிலி ட்டபொழுது அவனைச்சிறைவிடும் படி சோழனைப் பொய்கையார் பாடியது

களாவதி—பாரனென்னு மிருடிக்குப் புஞ்சிகஸ்தலையென்னும அப்சரசி டம்பிறந்தபுத்திரி. இவளழகைப்பா ர்வதிகண்டதிசயித்துவிருமபியதை க்கொடுக்கும் பதுமினிவித்தையை யுணர்த்த, அதனால் சுவரோசிஷயை வசியஞ்செய்து மணம் புரிந்தவள்.

கலை } கனை } கர்த்தமன்புத்திரி. மரீசியின் மனைவி. கசியபனையீன்றவள்.

கள்ளில்ஆத்திரையனார் — ஆதனுங்கனிடம் பேரன்புடைய புலவர். என்மனத்திற்கண் நின்னையன்றி வேறின்று. என்னுயிர் பிரியுங்காலமும் என்னையான் மறக்குங்காலமுமாகிய இரண்டுமே உன்னையான் மறக்குங் காலமாம்எனப்பாடியவர்.

கறுப்பன் — (1) பாண்டி நாட்டிலுள்ளதொரு உக்கிரதெய்வம். ஐயனார்சேனாபதி. மகாகாளனெனக்காந்தங்கூறும். (2) தொண்டைநாட்டுமாவைநகரத்தில் விளங்கியதொருவேளாண்பிரபு இவன்பிதாகஸ்தூரி. புலவர்க்குப் பொனமாரி பொழிந்தவன்.

கற்கர் — ஓரிருடி. யதுகுலத்துதித்து மதுரையை யாண்ட தசாருகன் காசிராஜன்மகள் கலாவதியைமணந்து அவளையப்புகத் தீக்ஷையில்லாதவனென மறுத்துவிட, அத் தசாருகனுக்குத் தீக்ஷை செய்வித்தவர்.

கற்கி — திருமாலின் கடைசியவதாரம். கலியுகமுடிவில், சம்பளகிராமத்தில் திருமால் ஒருபிராமணப்பிள்ளையாய்த் தோன்றித் தவறிய தருமங்களை நிலைப்படுத்துவரென்பது நூற்றுணிபு.

கற்பகவல்லி — திருமயிலையில் உமாதேவியாருக்குவழங்குந்திருநாமம்.

கற்பகேசுவரர் — (1) திருக்கடிக்குளம் (2) திருவலஞ்சுழி இங்கே சிவபிரானுக்கு வழங்குந திருநாமம்

கற்பம் — (1) காலத்தின்பேரெல்லை (2) வேதாங்கங்கள் ஆறனுள் ஒன்றாகிய கல்பசூத்திரங்கள். இவை வேதமந்திரங்களாய் இவைகளிக்கருமத்திற் குரியவை யெனக்கூறும்.

கற்பாரியம் — சிற்பநூல் முப்பத்திரண்டினுளொன்று.

கற்பூரபாண்டியன் — மதுரையில் குங்குமபாண்டியனுக்குப்பின் அரசுபுரிந்த எழுபதாம் பாண்டியன்.

கனககர்மன் — அச்சுவகண்டன் படைவீரரிலொருவன்.

கனகசடம் — ஐந்தவர் ஜன்மபூமி.

கனகசபை — பொன்னம்பலம். இது சிவபெருமானுடைய ஐந்துநடனசபைகளிலொன்று. சிதம்பரத்திலுள்ளது. விராட்புருடனுக்குரிய இதயஸ்தானமெனப்படும்.

கனகசித்திரன் — அச்சுவபுரத்தரசன் குமாரன். [சூளா]

கனகசித்திரை — அச்சுவகண்டன்பாரி.

கனகபதாகை — சுரமஞ்சரியின் தோழி. [சீவக]

கனகமாலை — சீவகன் மனைவியருளொருத்தி

கனகவிசயர் — ஆரியமன்னனாகிய பாலகுமாரன புத்திரர். கண்ணகிவடிவைச் சமைத்தற் பொருட்டுச் சிலைகொணர்தற்காக இமயஞ்சென்ற சேரன செங்குட்டுவனால் வெல்லப்பட்டு, அவன் கட்டளைப்படி இமயச்சிலையைத் தலையிற் சுமந்தோர் [மணி]

கனகன் — கனகமாலையின் சகோதரரிலொருவன் [சீவக]

கனன்முகன் — சி[illegible]ளொருவன் - உதிரப் பலிக்குச் சென்ற வைரவருடன்போன பரிசனரிலொருவன்.

கனுநால் — ஆயர்நகர்க்கண் புத்தேவன் சொல்லியபடி, கனுவின் பலனைப் புலப் படுத்துவதற்குப் பொன்னவன் கட்டளைக் கவித்துரையாலியற்றியது

கனித்திரன் — (1) பிரஜானன் மகன் — சுபன் தந்தை. - விவிம்சன் மகன்.

டன். இவன்றம்பிமார் இவனைக் கொல்ல யாகத்தினின்றோர் பூதத்தையுண்டுசெய்து விடுப்ப, அது இவனைக்கொல்ல வியலாது ஏவினோரையேகொன்றது. (2) விவிம்சன்புத்திரன். கரந்தமன்பிதா.

கனிவாய்மொழியம்மை — திருவெண்பாக்கத்திலே உமாதேவியாருக்கு வழங்குந்திருநாமம்.

கன்மாடபாதன் — இக்ஷ்வாகுவம்சத்து மித்திரசகன்புத்திரன். வேட்டைக்குச்சென்றபோது ஒரிராக்கதனைக்கொன்று சென்றமையின், அவ்விராக்கன்றம்பி பழிக்குப் பழிவாங்கக்கருதி மித்திர சகனுக்குப் பரிசாரகனாயமர்ந்திருக்கையில் ஒருநாள் வசிட்ட முனிவர் ஆங்கடைந்து அரசன மாளிகையில் உண்ணுகையில் அவ்வரக்கன நரமாமிசத்தைச் சமைத்துப்படைக்க, முனிவருணர்ந்து வெகுண்டு அரசனை அரக்கனாக வெனச்சபிக்க, மித்திரசகன யான் நிரபராதியாயிருக்கையில் என்னைச்சபித்தது தகுதியன்று எனத்தானும கையில் நீரேற்ற அவரைச்சபிக்கத்தொடங்குகையில், அவனமனைவி தடுப்ப அந்நீரைத்தனின் மேல்விட்டுவிடக் கன்மாடபாதனாயினவன். இவ்விபரீதங்களை யுணர்ந்த முனிவர் அரசன் விரைவிற் பண்டைய வடிவினனாக வெனச் சாபானுக்கிரகஞ் செய்தனர்.

கன்னப்பிரமையர் — நெற்றியில் மாயப் பொட்டிட்டுக் கனைக் கோல் தாங்கிச் சிவனடியரல்லாதார் வீட்டில் களவிட்டு அப்பொருளால் சிவனடியார்க்கமுது செய்வித்த வீரசைவர்.

கன்னர் — செங்குட்டுவனுக்கு நண்பர். ஆரிய அரசர். இவர் தொகையால் நூற்றுவர் [சிலப்]

கன்னியாகுப்சம் — ஒருதேசம். குசநாபன் புத்திரிகள் நூற்றுவரையும் பூப்படையா வண்ணம் வாயு பகவான்சபிக்க, பிருகதத்தன் அவர்களசாபத்தை யகற்றி மணம் புரிந்து வாழ்ந்த இடம்.

கன்னியாகுமரி — மலைநாட்டிலுள்ள குமரியம்மையின் ஸ்தலம். இக்குமரி ஸ்தலம் முன்னாழியிற் கடலாற்கொள்ளப்பட்டது. இப்பொழுதுள்ளது பின்னரமைக்கப்பட்டது. இது குமரியென்றும் வழங்கும்.

கன்னியுமையம்மை — திருக்கச்சூரில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம.

கன்னியை — இவள சியாமகனால் தனக்கெனக் கொண்டு போகப்பட்டு இறுதியில் விசர்ப்பனுக்கு மனைவியாக்கப் பட்டவள்.

## கா

காகந்தி — காவிரிப்பூம் பட்டினம், ககந்தனென்பவனால ஒருகாலத்தில் அரசு செய்யப்பட்டது.

காக்கை பாடினியார் — அகத்தியர் மாணாக்கர்பன்னிருவரிலொருவரும், தொல்காப்பியனாரோ டுடன்பயின்றவருமாகிய ஒருதமிழ்ப் புலவர். இவரால் செய்யப்பட்டது காக்கைபாடினியமெனும் இலக்கண நூல். இதன் சூத்திரங்களிற் சிற்சில யாப்பருங்கலக்காரிகையுரையிற் காணப்படுகின்றன.

காக்கைபாடினியார்நச்செள்ளையார்— ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன்மீது பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்திலைப்பாடி, அணிகலனுக் கென்று ஒன்பது துலாப் பொன்னும், நூறாயிரம் பொற்காசும் பரிசில் பெற்று அவன் பக்கலிலிருக்கையுங் கொண்ட பெண்பாலார். நச்செள்ளையா ரென்பது இவரதியற் பெயர். குறுந்தொகையில், "திண்டேர் நள்ளி கானத் தண்டர், பல்லா பயந்த நெய்யிற் றொண்டி, முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ, றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி, பெருந்தோ ணெகிழ்த்த செல்வர்க்கு,விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" என 210 - ம் செய்யுளில் காக்கை கரைந்தமையைப் பாராட்டிக்கூறிய அருமையால் காக்கைபாடினியாரெனச் சிறப்புப் பெயர் வாய்ந்தவர்.

காசன் — சுகோத்திரன் மகன்.

காசி—புண்யகரமான ஸப்தபுரிகளிலொன்று. இது கங்காதீரத்திலுள்ளது பூர்வம் சமஸ்கிருத சங்கமிருந்தவிடம் இது வரணை அசியென்னு மிருநதிகள் கலக்குமிடத் துள்ளமையின் வாரணாசியென்றுஞ் சொல்லப்படும். மணிகர்ணிகை முதலிய அறுபத்து நான்கு கட்டங்கள் கங்கைக் குள்ளன. அவற்றன் இது விஸ்வநாத ராலய கட்டம். அம்மையார் விசாலாக்ஷி. முருகக்கடவுள் தண்டபாணியென விளங்குவர். இதன் சிறப்பைக் கூறுவது காசிகண்டம் காசிரகசியமே யன்றிற்கொரு புராணத்தும் ஒரு சிறிது கூறுமாம்.

காசிகண்டம் — ஸ்காந்த புராணத்தின் ஐம்பது கண்டங்களிலொன்று. இது நூறு அத்தியாயங்களை யுடையது. இதனைத் தமிழ்க்கவி செய்தவன் அதிவீரராமபாண்டியன்.

காசியபன் — (1) ஓரிருடி. கசியப முனிவர். மாயையைப் புணர்ந்து சூரனாதியரைப் பெற்றவர். (2) பாம்பு மந்திரத்தில் வல்ல வோரந்தணன். பரீக்ஷித்துவைப் பாம்புகடிக்குமென் றுணர்ந்து அவனுக்கு வைத்தியஞ் செய்யச் செல்லுகையில், தக்ஷகனைக்கண்டு அவனைப் பரீக்ஷைசெய்து வேண்டிய திரவியங் கொடுத்து அங்குச் செல்லவொட்டாது தடுத்தனுப்பப் பட்டவன். (3) சிற்பநூலாசிரியரு ளொருவன் (4) புத்தசிஷ்யர் பதின்மரு ளொருவன்.

காசியன்—(1) சேனசித்து புத்திரன் (2) ஆயுவின் பௌத்திரனான சுகோத்திரன் புத்திரன்.

காசியாரண்ணியேசுவரர் — திருஇரும் பூளையில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

காசிரகசியம் — காசியின் பிரபாவங்களை விளக்குவதோர் நூல். இது தமிழில் மீநாட்சி சுந்தரம்பிள்ளையாற் கவிப்படுத்தப்பட்டது.

காசிராஜன் — அம்பிகை அம்பாலிகை அம்பை யென்னுமாதரைப் பெற்றவன்.

காஞ்சன்புரம் — வித்தியாதர நகரங்களுளொன்று. காஞ்சனனும் காவசனை மகையும் இந்நகரத்தவர். இது விஞ்சைமா நகரமென்றும் பெயர் பெறும். [புரா]

**காஞ்சனமாலை** — மலயத்துவஜபாண்டியன் மனைவி. இவளோர் முற்பிறப்பில் விச்சாவதியெனுங் கந்தர்வ மங்கையாய்த் தவங்கிடந்து உமாதேவியைப் புத்திரியாகப்பெற வரமேற்றவள்.

**காஞ்சனன்** — (1) புரூரவன் பௌத்திரனை அமவசுவின் பௌத்திரன். (2) காஞ்சனபுரத்தரசன். உலகவறவியில் உதயகுமாரனுக் கஞ்சிக் காயசண்டிகையின் வடிவெய்திய மணிமேகலையை அவ்வுதய குமாரன் தொடர்ந்தது கண்டு, காயசண்டிகையின் சோரநாயகனென நினைந்து அவனைக் கொன்றவன் [மணி.]

**காஞ்சிபுரம்** — தொண்டை நாட்டிலுள்ள ஒரு புண்ணியஸ்தலம். ஒரு காலத்தில் சோழராஜ தானியாகவுமிருந்தது. ஏகாம்பரநாதரென்னுஞ் சிவபெருமானும் காமாக்ஷியம்மையார் என்னும் உமாதேவியாரும், வரதராஜர் என்னும் திருமாலுங் கோயில் கொண்டுளர். இது நூற்றெட்டுத் திருப்பதிகளி லொன்று. திருப்பாடகம் திருஊரகம் திருவெஃகா என்னுந் திருப்பதிகளும் அங்கேயுண்டு. அநேக சிவாலயங்களும் அநேக விஷ்ணுவாலயங்களுஞ் சிறம்பியவிடம். பரிமேலழகரும், கச்சியப்ப சிவாசாரியரும் பிறந்தவிடம். சங்கராசாரியர் ராமாநுஜாசாரியர் முதலிய மதவாதிகள் வித்தியாவாதம்புரிந்தவிடம். இதில் முக்காலச் செய்திகளையும் தெரிவிக்கும் கந்திற்பாவைத் தெய்வமும், துணையிளங்கிள்ளி வெண்பான் கட்டியபுத்தாலயமும் தென்மேற்கு மூலையில் தன்மதவனமெனுஞ் சோலையும் இருந்தன. மணிமேகலை பலநாள்தங்கியிருந்து பலர்க்கும் அன்னமளித்து அறவணவடிகள் பால் தருமங்கேட்டு ஈண்டு மரித்தனளென மணிமேகலை கூறும்.

**காஞ்சிசோமயாஜியார்** — வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வரு ளொருவர்.

**காட்டக்கோட்டையர்** — ஆயர்குலத்துதித்த ஒருவீரசைவர். தாம்மேய்த்துவந்த ஆட்டின் சாணத்தைக்குவித்து வேதிகையாக்கி அதன்மேல் சிவலிங்கத்தை வைத்துத்தாம்மேய்க்கும் ஆட்டின பாலை அபிடேகித்துவர, அதுகண்ட அவர்பிதா பாற்குடத்தை யுதைக்க அருகிருந்த கோடரியால் அவர்சிரத்தைத் துண்டித்து முத்தியடைந்தவர்.

**காண்டவம்** — இந்திரன்வனம். இது அக்கினிக்கிரையாக அர்ச்சுனனாற் கொடுக்கப்பட்டது.

**காண்டிக்கியன்** — நிமிவமிசத் துதித்த தர்மத்துவசன் ஜனகராஜன் பௌத்திரன். இவன பிதா மிதத்துவசன். தன் சிறிய தந்தையின் மகனை கேசித்துவசனோடு மூரணிவனஞ் சென்றவன்.

**காண்டீபம்** — அர்ச்சுனன்வில். இது அக்கினி தேவனால் கொடுக்கப்பட்டது.

**காதந்திரம்** — வாருசியாற் செய்யப்பட்ட வடமொழி யிலக்கணநூல்.

**காதம்பரி** — ஒருவடமொழிநாடகம். கந்தர்வ கன்னிகையாகிய காதம்பரியை உச்சயினி நகரத்தரசனாகிய சந்திராபீடன் மணம்புரிந்தசரிதம் இதில் விரித்துக் கூறப்பட்டுளது இது பூர்வகாதம்பரி உத்தர காதம்

பரியென் றிருவகைப்படும். அவற்றுட் பூர்வகாதம்பரி பாணகவியானும் உத்தரகாதம்பரி அவர் புதல்வரானுஞ் செய்யப்பட்டனவெனச் சொல்லுகிறார்கள். இது பன்னீராயிரங் கிரந்தங்களையுடையது.

காதி — குசாம்பன் மகன். விசுவாமித்திரன்பிதா. மகோதயநகரத்தரசன்

காத்தியாயனர் — (1) பாணினிவியாகரணத்திற்கு வார்த்திகஞ் செய்தவர். வரருசியென்றும் பெயருடையவர். (2) யாஞ்ஞவல்கிய முனிவர். ஒருமிருதி நூலாசிரியர் (3) புத்தசிஷ்யர் பதின்மரி லொருவர்

காத்தியாயனி — (1) உமாதேவி. (2) துர்க்கை. [யரிலொருத்தி.]

காந்தருவதத்தை — சீவகன் மனைவி

காந்தருவர் — பதினெண் தேவஜாதியரிலொரு சாரார்.

காந்தன் — அகத்தியமுனிவர்பால் மிக்கபக்தி யுடையவொரு சோழன் இவன் வேண்டுகோளுக் கிணங்கியே அவர் கமண்டலத்தி லிருந்த நீரை நதிவடிவாகப் பெருகச்செய்து சோழநாட்டை நீர்வளமுள்ள நாடாக்கினர். பரசுராமர் போர்செய்ய வந்தபொழுது கன்னி [துர்க்கை] யின் கட்டளையால் அவர் முன் செல்லாது வேற்றுருக்கொண்டு மறைந்து வதிந்தவன். காந்தமன் காந்தமன்னவ னெனவும்பெயர்பெற்றவன்.

காந்தாரம் — (1) ஒருதேசம். ஆரியாவர்த்தத்திற்கு மேற்கே யுள்ளது. காந்தாரன் அரசுபுரிந்தது. (2) ஒருபண்.

காந்தாரன் — யயாதிமரபினன். இவன பரம்பரையினர் குதிரை யேற்றத்தில் சமர்த்தர்.

காந்தாரி — திருதராட்டிரன் மனைவி காந்தார நாட்டரசனான சபலன் புத்திரி. கணவன் குருடனாகலின் தானுங் கண்ணைக் கட்டிக் கொண்டிருந்த பதிவிரதை. தன்மக்கள் நூற்றுவரைக் கொல்வித்ததற்காகக் கண்ணனை, அநாதிப்பிணமாகவும் ஏகாப் பிணமாகவும் போகச்சபித்தவள்.

காந்திமதியம்மை — (1) திருநெல்வேலி (2) திருமுக்கீச்சுரம் இந்த தலங்களில் உமாதேவி யாருக்கு வழங்குந் திருநாமம். (3) பவணவேகன் மனைவி. (4) இராமாநுஜாசாரியர் தாய்.

காந்தினி — வபற்கன் மனைவி. அக்குரூரனைப்பெற்றவள்.

காபாலி — (1) சிவன் (2) ஏகாதசருத்திரரி லொருவர்.

காபாலிகம் — பாசுபதம் மாவிரதம் காபாலிகமெனும் அதிமார்க்கமூன்றனுளொன்று. இது கபாலத்திற் பிக்ஷையேற்றுண்ணலைக் கைக்கொண்டொழுகுந் துறவினை வற்புறுத்தும். இம்மதத்திற்குக் காலவுருத்திரர் கடவுள். இது நெடுங்காலத்திற்கு முன்னரே மறைந்தது.

காபில காலயூபம் — சிற்பநூல்கள் முப்பத்திரண்டனு ளொன்று.

காபிலம் — கபிலராற் செய்யப்பட்டதொருமதம். இதற்கு ஆதாரம் காபிலசூத்திரமேயாம்.

காப்பியக்குடி — சீகாழிக்கருகே வடபுறத்திலுள்ள தோரூர். தேவந்தியின்கணவனான சாத்தன் வளர்ந்தவிடம் [சிலப்]

காப்பியாற்றுக்காப்பியனார் — களும்

காய்க்கண்ணி நார்முடிச் சேரலென்னும் அரசன்மீது பதிற்றுப்பத்தில், நான்காம்பத்திலைப்பாடி நாற்பதுலக்ஷம் பொன்னும் அவனரசிற் பாதி பாகமும் பரிசில்கொண்டவர்

காமதகனமூர்த்தி — சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கனுளொன்று. தாக்ஷாயணி பர்வதராஜ குமாரியாயவதரித் திருக்கையில், சிவபிரான் பிரம புத்திரருக்குத் தத்துவோபதேசஞ் செய்து கொண்டிருப்ப, சூரனுதியர் துயரைச் சகியாத தேவர்கள் தூண்டு கோளால் மலர்க்கணைதொடுத்த மன்மதனை யெரித்தருளிய மூர்த்தி.

காமதேனு — இச்சித்த பொருள்களையெல்லாங் கொடுக்க வல்ல தெய்வப்பசு. க்ஷீராப்தியிலுதித்தது. சுரபியென்றும் பெயர் பெறும்.

காமந்தகம் — இராஜதர்மத்தையுணர்த்துமொரு நூல்.

காமபாலன் — பலராமன்.

காமயோனிமண்டலம் — மணித்தீபத்திலுள்ள திரிபுர பைரவிபீடத்திற் கொரு பரியாயநாமம். இது அறுபத்து நான்கு சத்தி பீடங்களிலொன்று.

காமவல்லி — கற்பக விருக்ஷத்திற் படர்வதொருகொடி.

காமன் — (1) மன்மதன் (2) பிரசாபதிபடைவீரரிலொருவன் [சூளா]

காமாக்ஷியம்மை — (1) காஞ்சிபுரம் (2) திருஅநேகதங்காவதம் இத்தலங்களில்உமாதேவியார் திருநாமம்.

காமாரி — சிவன். காமதகன மூர்த்தியிற்காண்க.

காமிகம் — இருபத்தெட்டுச் சிவாகமங்களிலொன்று. இதிலே சிவதத்துவங்கள் நன்குவிளக்கப் பட்டன இது சிவபெருமானுடைய திருவடியும் மூன்று உபபேதங்களும்பரார்த்தங்கிரந்தமுமாகவிளங்குவது

காமியகம் — பாண்டவர்கள் ஆரணியவாசத்தில் வசித்திருந்த ஒருவனம். இது குருஜாங் கலத்தைச் சார்ந்துளது.

காமினி — ஆகாசகாமினியெனுமொருவித்தை [சிவக]

காமுகன் — பிரசாபதி [படைவீரரிலொருவன். [சூளா]

காம்பன்னதாளி — திருப்பந்தணநல்லூரில்உமாதேவியார்திருநாமம்.

காம்பிலியம் — துருபதன் தேசம். பாஞ்சாலத்தின் ஒருகூறு.

காம்பிலியன் — பர்மியாசுவன்மகன்.

காம்போஜம் — பரதகண்டத்தின்வாயுதிசையிலுள்ளதேசம்.

காயங்கரை — ஒருநதி. பிரமதருமனெனப்பெயரிய ஒருபௌத்தமுனிவன் இதன்கரையில்வதிந்துதவஞ்செய்தனன். அத்திபதியெனுமரசன் இடவயமெனுநகர நீங்கி அவந்திக்குச் செல்லும்பொழுதுதனது சேனையுடன் இதனருகி லுள்ள சோலையிலிறங்கினன் [மணி]

காயசண்டிகை — காஞ்சனனெனும் வித்தியாதரன்மனைவி. இவள்காஞ்சனனோடு பொதியமலையின் வளங்களைக் காணச்சென்று, உண்டவர் பசியைப் பன்னிரண்டாண்டுகற்றும் ஒருநாவற்கனியைக் காலாற்சிதைத்து, அதனை யுண்ணக்கருதிவந்த பட்டினிநோன்பியாகிய விருச்சிகமுனிவர் சாபத்தால் பன்னீராண்டு யானைத்தீயெனும் பெரும்பசிநோயால் வருந்தி, மணிமேகலை

கொடுத்த உணவால் அப்பசிமுற்ற வொழியப் பெற்றுத் தனதுநகரஞ் செல்வழியில், விந்த மலையிலேப் பாதுகாக்கும் விந்தாசடிகைசாயை யாலிழுக்க அவள்வயிற்றிற்சென்று அடக்கினவன்.

காயத்திரிபீடம் — சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது புஷ்கரத்திலுள்ளது.

காயாரோகணேசுவரர் — திருநாகைக்காரோணத்திலே சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

காய்சினவழுதி — இவனுக்கு உக்கிரபாண்டியனென்றும் நாமாந்தரம். தலைச்சங்கந் தாபித்துத் தமிழாராய்ந்தமுதற்பாண்டியன். இவனுக்கு இராஜதானி குமரியாற்றி னருகே தலைச்சங்கமிருந்து கடல்கொள்ளப்பட்ட தென்மதுரை.

காரணம் — சிவாகமங்கள் இருபத்தெட்டனுளொன்று. இதுசிவபிரானது கெண்டைக்காலும் ஏழுஉபபேதங்களும் கோடி கிரந்தமுமாக வுள்ளது.

காரி — கடையெழு வள்ளல்களிலொருவன். பழைய ஹூரிலிருந்த குறநிலமன்னன். ஔவையாராலும் கபிலராலும்புகழப் பெற்றவன் இரவலர்க்கு நாட்டைக் கொடுத்தவன். மலையமா னென்றும் பெயரேற்றவன். இவன் குதிரையின் பெயர் காரி. திருமுடிக்காரியிற் காண்க.

காரிகிழார் — பல்யாகசாலை முதுகுடுமிப் பெயர்வழுதியைப் பாடியபுலவர் [புறநா]

காரிநாயனர் — அறுபான்மும்மை நாயன்மாரிலொருவர். தமிழ்நாட்டு மூவேந்தருமதிக்கும் பெருங்கல்விமான். திருக்கடவூரிலுதித்தவர். தம் பெயரால்இயற்றிய கோவைக்காகத் தமிழ்மன்னரளித்தபொருளைக்கொண்டு சிவாலயத திருப்பணிகள் செய்து முத்திபெற்றவர்.

காரியாறு — நெடுங்கிள்ளியெனுமரசன் பேயூரில்மரித்த இடம்.

காரியாற்றுத்துஞ்சியநெடுங்கிள்ளி — உறையூரிலிருந்த சோழபரம்பரையினன். சோழன் நலங்கிள்ளிக்குப் பகைவன். நெடுங்கிள்ளியென்றுஞ் சொல்லப்படுவன். கோவூர்கிழாராற்பாடப்பெற்றவன்.

காருடம் — விஷ்ணு புராணங்களிலொன்று. கருடோற்பவ முதலிய சரிதைகளைவிளக்கிக் கூறும் ஆறுயிரக்கிரந்தங்களை யுடையது.

காருண்ணியபாண்டியன் — மதுரையையாண்ட எழுபத் தொன்றாம் பாண்டியன். கற்பூரபாண்டியனுக்குப் பின் அரசுசெய்தவன்.

காரைக்காலம்மையார் — அறுபான் மும்மை நாயன்மார்களிலொருவர். காரைக்காலில் தனதத்தனென்னும் வைசிய னுக்குப் புதல்வியராய்ப் புனிதவதியென்றுதித்து, பரமதத்தனென்பானை மணந்து இல்லறமேற்கொண் டொழுகுகையில், அவர் கணவரிடங் கொடுக்கவென ஒருவர்கொடுத்த மாங்கனியிரண்டில், ஒன்றனைச் சிவனடியா ரொருவர்க்குக் கொடுத்து விட்டு, ஒன்றைக் கணவனுக்குக் கொடுக்க, அம்மாங்கனி தீங்கனியா யிருந்தமையின் மற்றொன்றனையுக்கேட்க, அம்மையார் சிவபெருமானைத் தியானித்து முன்பு அது வைத்தவிடத்திற் கையிட்டுப்பார்க்க ஒன்றிருப்ப, அத

னைக் கணவனிடங்கொடுத்து நிகழ்ந்ததைச்சொல்ல, பரமதத்தன் அங்ஙனமாயின் அவ்விறைவ னருளால் இன்னொரு கனியும் பெற்றுத்தருக வென, அம்மையார் அங்ஙனமே கொடுப்பப் பரமதத்தன் இவர்பால் அச்சங்கொண்டு, அவரோடுடனுறைதற்கஞ்சி வேற்றுத் தேயஞ்சென்று வேறோர்பெண்ணை மணந்து அவள்பால் பிறந்த பெண் மகவுக்குப் புனிதவதி யென்றே நாமகரணஞ்செய்து வாழ்ந்து வருவானாயினன். அதனை யறிந்த புனிதவதியார் தம்மினத்தவரோடு ஆங்கடைய, பரமதத்தன் மனைவியையும் புத்திரியையும் உடன்வரக்கொண்டெதிர்வந்து நமஸ்கரிக்க, புனிதவதியார் உனக்காகச் சுமந்த இத்தேகம் இனிவேண்டுவதின்று என்றுடலை யுதற, மாமிசங்கள் கழிந்து எற்புடம்பாய்ப் பேய் வடிவுற்றுத் திருக்கைலாய கிரிக்குத் தலையால் நடந்துசென்று தரிசித்து, இறைவனருளால் திரு ஆலங்காட்டில் எழுந்தருளி யிருக்கின்றனர். இவரால் இயற்றப்பட்டவை: திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டு. அற்புதத் திருவந்தாதி. இரட்டைமணிமாலை.

காரைத்திருநாதர் — திருநெறிக்காரைக்காட்டிலே சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

கார்க்கியன் — சினிபுத்திரன். பாஷ்கலன் சிஷ்யன். ருக்வேதத்தில் மிக்க சாமர்த்தியன். சாளுவன் இவனைப்பார்த்து நபுஞ்சகனென்னவிளிக்க, யாதவர்கள் சிரித் தமையின் வெகுண்டு, லோகயஸ்மம்புசித்துப் பன்னீராண்டு கடுந்தவம் புரிந்து காலயவனனைப் பெற்றவன்.

கார்க்கோடகமுனி — வடாரணியமெனுந் திருவாலங்காட்டில் தவஞ்செய்து நடனதரிசனம் பெற்றுள்ள ஒருபெருந்தவசி.

கார்க்கோடகன் — காசிபன் மனைவியர் பதின்மூவரில் கத்துருவிடம் பிறந்த நாகர்களி லொருவன். வாசுகிதம்பி. ஈசானதிசையிலுள்ள மாநாகன்.

கார்த்த வீரியார்ச்சுனன்—ஷட்சக்கிரவர்த்திகளி லொருவன். கிருதவீரியன் புத்திரனாகலின் இது தத்திதாந்த நாமம். ஹைஹயமரபினன். இவன் பதினாயிரம யாகங்கள் செய்து இமயமலை நாட்டைச் செவ்வையா யரசு செலுத்தியவன். ஜமதக்கினி முனிவரைக் கொன்றவன். பின்னர், அப்பழிவாங்கக் கருதிய பரசுராமராற் சொல்லப்பட்டவன்.

கார்த்திகேயன் — கிருத்திகை புத்திரன். முருகக்கடவுள்.

கார்த்திகை — (1) வார்த்திக னென்னும் வேதியன் மனைவி. தக்ஷிணாமூர்த்தி யென்பவனைப் பெற்றவள் [சிலப்] (2) ஒருநக்ஷத்திரம்.

கார்நாற்பது — சங்கமருவிய பதினெண்கீழ்க் கணக்கினுளொன்று. நாற்பது வெண்பாக்களாலாயது. மதுரைக் கண்ணங் கூத்தனு ரியற்றியது.

காலகணிகன் — சித்திரகுப்தன். இவனை யமனது கணிகனென்பர்.

காலகவி— விரோசனன் மகன் - புலிக்குச்சகோதரன். துவாபரயுகமுடிவிலே தானவருதவியாய்விஷ்ணுவோ மரமாய் ரேபல்லையில் முளைத்து

அங்குள்ள கோபாலர்க்குள் குரோதத்தை யுண்டாக்குகையில், சங்கர்ணனென்னும் பூதம் ஒருபிராமணனிடத்தில் ஆவேசித்து, இவ்விடயத்தைக் கிருஷ்ண பலராமர்க்கறிவிக்க, அவர்கள் அம்மரத்தை நிர்மூலஞ்செய்து கோபாலர்களையுங் கோக்களையுங் காத்தருளினர்.

காலகவுசிகன் — காசியிலிருந்த ஒரு வேதியன். அரிச்சந்திரனுடைய மனைவியை விலைக்குக் கொள்ளும்படி, கலிபகவான விசுவாமித்திரர் அநுமதியால் கிரகநிலை பெறறவராதலின், அவரேவலால் இவ்வேதியனைக் காசியிற் றோற்றியிருந்தனர்

காலகவுட்சேயன — க்ஷேமதரிசியெனுங் கோசலநாட்டரசன் மந்திரி

காலகார்முகன் — அரக்கன் சுமாலி புத்திரன்

காலகாலன — சிவபூசையி லிருந்த மிருகண்டு புத்திரரான மார்க்கண்டேய முனிவரை உயிர்கவரவந்த இயமனையுதைத்து வீழ்த்தி மார்க்கண்டேயரைச் சிரஞ்சீவி யாக்கி, உலகபாரந் தாஙகமுடியாத பூமிதேவியின் வேண்டுகோளால் இயமனையெழுப்பிய சிவமூர்த்தி.

காலகூடம் — (1) பாரதப் போரில் சேனைகள் தங்கியஇடம். (2)விஷம்

காலகேயர் — இராக்கதர். காசியபருக்குக் காலையென்பாளிடம் பிறந்தவர்கள். மிகக்கொடியராதலின்இவர்களால் வருந்திய தேவர்கள் அகத்தியமுனிவரைவேண்ட, அவர்இவர்களுறைவிடமான சமுத்திரத்தை நீரின்றிப்பானஞ்செய்தனர். அதன்பின் அர்ச்சுனனால் சங்கரிக்கப்பட்டார்கள்.

காலஞ்சரம் — சுவேதனுக்காகக் காலனையச்சிறத்தியவிடம். [illegible] திரு வெண்காடு. [illegible].

காலநாபன் — இரணியாக்ஷன் [illegible].

காலநேமி—(1) ஒருதானவன் - தாரகயுத்தத்தில் திருமாலாற் கொல்லப்பட்டவன். 2) இராவணனுக்குமாதுலன். (3) விருத்தையின் பிதா.

காலபைரவன — காசியிலுள்ள பைரவமூர்த்தி. அந்நகரம் இவர்கட்டளைக்கடங்கியது

காலயவன் — நாரதர் சூழ்ச்சியால் இவன் மதுராபுரிமேற் படையெடுத்து வருவதை முன்னரே யுணர்ந்த கண்ணன, விசுவகர்மனாற்கடலிலே யோர் பட்டண நிர்மாணஞ்செய்து அங்கே எல்லோரையும் போக்கிவிட்டு, தாமொருவரே நிராயுதராக இவன்முன்வரக்கண்டுபின்றொடர, அஞ்சினவன போல முசுகுந்தன் துயின்று கொண்டிருந்த குகையினுள்ளே செல்ல, இவனும்பின்சென்று துயின்றுகொண்டிருந்த முசுகுந்தனைக் கண்ணனென்றுதைப்ப, அவன் விழித்துப்பார்க்க முசுகுந்தன பெற்றிருந்த வரமகிமையால் பஸ்மமானவன்.

காலரூபி — அபிநந்தனன் இந்திரபட்டத்தை விழைந்து செய்த யாகத்தை இந்திரன் பிரார்த்தனையாற் சிதைவித்த ஓரரக்கன்.

காலவேகன் — சிவகணத் தலைவரிலொருவன். வைரவருடன் உதிரப்பலிக்குச் சென்றவன்.

காலன் — யமன்.

காலா, காலை. } வைசுவாநரனென்னும் தானவன் புத்திரி. கசியபன்மனைவி. காலகேயர்களைப் பெற்றவள்.

காலாநலன்—அநுபௌத்திரன். சபாநலன் மகன்.

காலாந்தகமூர்த்தி— அறுபத்துநான்கு சிவமூர்த்தங்களி லொன்று. காலகாலனிற்காண்க.

காலாந்தகன்—காலாந்தகமூர்த்தி

காலேசுவரர் — திருஅநேகதங்காவதத்திற் சிவபெருமான் திருநாமம்.

காவட்டனார் — அந்துவங்கீரனைப்பாடிய புலவரு ளொருவர். [புறநா]

காவற்பெண்டு — நல்லிசைப்புலமை மெல்லியலாருளொருவர்.

காவியன் — கவிபுத்திரன். சுக்கிரன்.

காவிரி — ஒருபுண்ணியநதி. இது அகத்திய முனிவர் கமண்டலத்தைக் கவேரனிரியில் விநாயகராற்கவிழ்த்துற்பத்தி செய்யப்பட்டது. இந்நதியின்வளத்தினாலே சோழநாடு புனனாடெனப் படும். இந்நதியின் இருகரையோரங்களிலும்எண்ணிறந்த சிவாலயங்களுள.

இராஜருஷியும் யோகிகளிற்சிறந்தவருமாகிய கவேரமுனிவர் பிரமதேவரைக் குறித்து அருந்தவஞ்செய்து அவரருளால் விஷ்ணுமாயையைத் தம்புத்திரியாக அடைந்து முத்திபெற்றன ரென்றும், பின்னர் அக்கன்னி பிரமதேவர் கட்டளைப்படி நதிவடிவாகிப் பிரவகித்துக் கவேரகன்னிகாவிரி யெனப் பெயரேற்றனள என்றும் ஆக்கிநேயபுராணம் - இரண்டாம்பாகம்- காவேரிமகத்திம் 23ம் அத்தியாயங்கூறும்.

காவிரிப்பூம் பட்டினத்துக காரிக்கண்ணனார் — கடைச்சங்கப் புலவரிலொருவர். வணிககுலத்துதித்தவர். இவராற் பாடப்பெற்றோர், இகவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திரு மாவளவன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பிட்டன் கொற்றன் முதலியோர். திருவள்ளுவமாலையிலும் இவர் கவியொன்றுண்டு.

காவிரிப்பூம்பட்டினம் — சோழமண்டலத்தில் கீழ்க்கடற்கரையிற் காவிரிசங்கம மாகுந் துறைக் கருகே சோழராசருடைய பழைய இராஜதானி. தென்னாட்டிலிருந்த பிரபல நகரங்களெல்லா வற்றினுஞ் சிறந்தது. அங்கே வதிவோர்க்கும் மன்னர்க்கும் பல்வகையாற் பயன்படும் வெள்ளிடைமன்றம் இலஞ்சி மன்றம் நெடுங்கன்மன்றம் பூதசதுக்கம் பாவைமன்றமெனும் ஐந்துமன்றங்கள் வேறெங்குமின்றி யிந்நகர்க்கே சிறப்பாயுள்ளன. [சிலப்]இவற்றின் விவரங்கள் அவ்வவற்றின் சிறப்புவரிகளிற் கண்டுகொள்க.

இந்நகரம் தொழிலாளர் வாழும் மருவூர்ப்பாக்கமும், பிரபுக்கள் வசிக்கும் பட்டினப்பாக்கமுமென இருபகுதியுடையது. எண்ணிறந்த சிறந்தபுலவர்களும், கல்வி வெற்றிகொடைமுதலிய வற்றிற் சிறந்த பல அரசர்களும், பட்டினத்துப் பிள்ளையாரையொத்த உண்மைத்துறவிகளும் தோற்றிய நகரம்.

இங்கு இந்திரனால் நிருமிக்கப்பட்ட எழரங்குகளையுடைய புத்தாலயமுண்டு. இந்நகரத்தின் பழைய பெயர்சம்பாபதி. இதுகாகந்தியென்றும், புகாரென்றும், இதன்துறை பொன்னித்துறை யென்றும் பெயருறும்.

காவிரிவாயில் — காவிரிக் கரையில்

திருமுகத்துறை கழிகின்ற வாயில்.

இது காவிரிப்பூம்பட்டினத்துள்ளது

காவேரி — காவிரியிற்காண்க.

காழி—சீகாழி. காழியெனும்மாநாகம் பூசித்தமையின் இப்பெயருற்றது.

காளத்தி—பஞ்சபூத ஸ்தலங்களிலொன்று. இதுவாயுத்தலம். ஈண்டுச் சிவாலயத்துள்ள தீபம் எக்காலும் அசைந்துகொண் டிருத்தலே அதற்கறிகுறியென முதியோர் சிலர் கூறுவர். இது கண்ணப்பநாயனார் முத்தியடைந்த ஸ்தலம். ஈண்டுச்சிலந்தி முத்தியடையப் பெற்றதும் பாம்பும் யானையும் சிவார்ச்சனை விடயமாக ஒன்றோடொன்று பொருது முத்தியடையப் பெற்றதுமாதலின், [ சீ + காளம் + அத்தி ] சீகாளத்தி என இத்தலத்திற்குப்பெயராயது.

காளத்தியப்பன் — தொண்டைமண்டலத்து வல்லமென்னுநகரில் விளங்கிய ஒருவேளாண்பிரபு. ஒருபுலவன் தன்மேற் பிரபந்த மொன்று பாடி ஒருகறவைப்பசு வேண்டுமெனக்கேட்க, ஒவ்வொரு செய்யுட்கொவ்வொருகறவையும், ஒவ்வொருகறவைக்கும் மேய்ப்போன் கறப்போன் பால் காய்ச்சுவோ ளென மும்மூன்றாட்களும் வழங்கி அவர்கள் போஷணைக்குவேண்டிய திரவியமுமுதவிப் பொன்மாரி பொழிந்தனுப்பியவன்.

காளத்தீசர் — சீகாளத்தியில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம். தேவியார் ஞானப்பூங்கோதை.

காளமுகி—சப்தமேகங்களுளொன்று. இது கன்மாரி பொழிவது.

காளமேகப்புலவர்- திருவரங்கத்திலே மடைப்பள்ளித் தொழில் செய்து வந்த ஒரு வைணவப் பிராமணர். திருவானைக்காவிலிருந்த மோகனாங்கியென்னுந் தாசியிடம் நட்புற்றிருந்தவர். ஜம்புகேச்சுரா லயத்தில் மார்கழிமாச உற்சவத்தில்திருவெம்பாவை கூறிய மோகனாங்கி " என்கொங்கை நின்னன்பரல்லார் தோள்சேரற்க " எனும் திருப்பாசுரத்தைக் கூறுகையில், பிறர் அவள் வைணவனோடுடன்விழைச்சுக் கருதிநகைப்ப, மோகனாங்கி நாணுற்று, அன்றிரவு இவர் வழக்கப்படி வீட்டிற்குவரக் கதவுதிறவாளாகி நீ வைணவனாக விருத்தல் எனக்குச் சம்மதமில்லை. [illegible]வேண்டாமெனமறுப்ப, வைணவர் திருமண்காப்பு முதலியவற்றையழித்துவிட்டு, சம்ஸ்காராதிகள் செய்துகொண்டு சிவசின்னமணிந்து, கொடியவைணவத் துவேஷியாய்மோகனாங்கியிடம் பிரியா நண்புகொண்டிருக்கையில், ஒருநாள் சிவாலயத்தில் அவள் நடித்துக் கொண்டிருந்தபொழுது ஆலயத்தோரிடத்தில் துயின்றுவிட, நேரமானமையின் நடன முடிந்தவுடன் மோகனாங்கி வீட்டுக்குப போய்விட்டனள். இஃதிங்ஙனமாக: அவ்வூரில் [illegible] ஆசுகவியாகக் [illegible] அகல[illegible] சுவரியை யுபாசித்துவர, அந்று அம்மையார் ஓரிளம்பருவப் பெண்ணாகித்தன்வாய்த்தம்பலத்தீத அவன் வாயிலுமிழச்செல்ல, அவன் நித்திரை மயக்காலும் யாரோ பெண்ணென்னுங் கருத்தாலும் மறுக்க, அம்மையார் இவ்வேதியன் வாயில் உமியவர், மோகனாங்கி [illegible] கருதி அவனுக்குக்கோபமுண்டாகு

மென்று தங்க்காமல்ஏற்றுக்கொண்
டனர். உடனே தேவியார் காளதி
தந்து நீ காளமேகம் போலக் கவி
மாரி சொரிகவென ஆசீர்வதிக்கப்
பெற்றவர்.

வைணவகண்டனமானசெய்யுள்
கள் எண்ணிறந்தன பாடி வருத
லின், மழை பெய்யுந் தறுவாயில்
கன்னபுரத்திருமால கோயிலினுட்
செல்லக் கண்டவைணவர் தாளிட்
டுவிட்டுத் திருமாலைப்பாடின் திரு
க்கதவந் திறப்போமென, "கன்ன
புரமாலே கடவுளிலு நீயதிகம்"
எனக்கூறியவுடனே கதவைத்திற
ந்தவிட, வெளியேவந்து "உன்னி
லுமோ யானதிகம் ஒன்றுகேள் -
முன்னமே, உன்பிறப்போ பத்தா
முயர்சிவனுக் கொன்று மில்லை.
யென்பிறப்பெண்ணத் தொலையா
தே." எனப்பாடிமுடித்தவர்.

சிலகாலம் திருவானைக் காவினி
லிருந்து; பின்னர். மோகனாங்கி
யோடு தென்னாடுமுழுவதும் யாத்
திரை சென்றவர். இரட்டைப்புல
வர் ஒரு சுவர்த்தலத்தில் "நாவெண
ணெரு னஞ்சிருக்கு நற்சாபங் கற்
சாயம்" என் ஏலுதிப்போக, அது
கண்ட காளமேகம் ஆணைந்தான் மண்டின்ற
பாணமே—' என அதன்கீழெழுதி
ச்செல்ல, மறுநாள் இரட்டையர்
இது காளமேகப் புலவராலெழுதப்
பட்டதென் றுணர்ந்து கொண்டு,
"தாணுவே,சீராரூர்மேவுஞ்சிவனை
நீயெப்படியோ,நேரார்புரமெரித்த
நேர்" எனமுடித்தனர்.

காரைக்காலின்தென்புறத்துள்ள
திருமலை நாயகன் சமஸ்தானத்தலைவர்
யடையச்சென்றபொழுது அங்கிரு
ந்த அதிமதுரகவி முதலியவர்கள்
நீர்யார்? பாடுவீரா? எங்குவந்தீர்?
என்றித்தகைய தூக்கள்விட அத
ற்கொரேவிடையாக, "தூதைந்து
நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலைசொல்லத்,துகளி
லாவந்தாதி மூன்றுநாழிகையினிற்
றொகைபட வகுத்துரைக்கப், —
பாதஞ்செய் மடல்கோவை பத்து
நாழிகைதனிற் பரணியொருநாண்
முழுதுமே, பாரகாவியமெலாமொ
ரிருதினத்திலே பகரக்கொடிக்கட்
டினேன்,— சீதஞ் செயுந்திங்கண்
மரபினனீடுபுகழ் செய்ய திருமலை
ராயன்முன், சீறுமாறாக வேதாறு
மாறுகள்செய் திருட்டுக்கவிப்புல
வரைக்,— காதங் கறுத்துச் சவுக்
கிட்டடித்துக் கதுப்பிற் புடைத்து
வெற்றிக், கல்லணையி னொடுகொ
டிய கடிவாள மிட்டேறு கவிகாள
மேகநானே,"—எனவும்,காளமேக
மாயின் மழை பொழியுமாவெனக்
கேட்ப, "கழியும் பிழைபொருட்
டள்ளிநன் னூலங் கடலினுண்டு,
வழியும் பொதிய வரையினிற்கால்
கொண்டு வன்கவிதை, மொழியும்
புலவர் மனத்தேயிடித்து முழங்கி
மின்னிப், பொழியும் படிக்குக்கவி
காள மேகம் புறப்பட்டதே"என
வுங்கூறி. அவைக்களத்தில் அவர்
கள் தக்கதோராதனங் கொடாமை
யின் சரஸ்வதி சிந்தனையாக "வெ
ள்ளைக்கலையுடுத்துவெள்ளைப்பணி
பூண்டு, வெள்ளைக் கமலத்தில் வீற்
றிருப்பாள் - வெள்ளை, அரியாசன
த்தி லரசரோ டென்னைச், சரியாச
னம்வைத்த தாய்" எனக்கூற அர
சன்கேகே ஒருபொற்பீடமுண்டாக

அதிலிருந்தவர். அங்குள்ளசிலர்நான் கவி. நான்கவி யெனப் புகழ்ந்து கொள்ளக் [கண்]டு "வாலெங்கே நீண்டவயிறெங்கே முன்னிரண்டு, காலெங்கே யுட்குழிந்த கண்ணெங்கே - சாலப், புவிராயர் போற்றும் புலவீர்காள் நீவிர், கவிராயரென்றிருந்தக்கால்" என உல்லங்கனஞ்செய்தவர். அதிமதுரகவி முதலியோர் அரிகண்டம் பாடுவீரோ வெனவினவ, யமகண்டமுஞ் செய்வோமென்று அதற்குரிய விதிப்படி யெண்ணிறந்த வினக்கட்கு ஆசுகவியால் சிலேடைப் பொருள்பட விடையளித்தவர். அவ்வரசன் தன்னைச்சன்மானியாமையால் "கோளரிக்குழூர் * * "— என வசைபாடி மண்மாரிபெய்வித்தவர்.

கயிற்றூறென்னும் விஷ்ணுக்ஷேத்திரத்தில் ஒரிடத்திருக் கையில் யானைவாகனத்தைச்சுமக்கப்பலாத்காரமாக ஆளாக்கப்பட்டு நெடுநேரஞ்சுமந்து நின்று மனம் வருந்தி "பாளைமணங் கமழுகின்ற கயிற்றூற்றுப் பெருமாளே பழிகாரா கேள், வேளையென்றா லிவ்வேளை பதினாறு நாழிகைக்கு மேலாயிற்றென், றோளைமுரித் ததுமன்றிநம்பியரானையுங்கூடச் சுமக்கச் செய்தாய், நாளையுனை யார்சுமப்பாரெங்நகளு மூன்கோயி லுசக்தானே" என வசைக்கவிகூறி அக்கோயிலை அன்று முதலடையச் செய்தவர். இவர் ஆசுவசை பாடுதலில் வல்லவர்களின் ஒன்வையரால் "வசை பாடக்காளமேகம்" எனச் சிறப்பித்துக் கூறப்பெற்றவர்.

காளாஞ்சனம்—ஒரு தீர்த்தம்.

காளாமுகம்—அகப்புறச் சமயங்களிலொன்று.

காளி—(1) சங்காரகாரிய நிகழ்த்தும் உருத்திரருடைய சக்தி. இச்சக்தி கரியமேனியும சதுர்ப்புஜங்களும் கபாலமாலிகையுஞ் செங்கண்ணும் தொங்கிய நாவுமுடையதாய் உபாசிக்கப்படும். காளிக்கு எட்டுக்கரங்களுளவாகச் சிலநூல்களாலும் அர்ச்சாரூபங்களாலும் அறியத்தகும். இவள் சண்டன் முண்டனென்னு மசுரரைக் கொனறதால் சாமுண்டியென்றும், மகிஷாசுரனை [எருமையுருவுடையவனை] க்கொனறதால் மகிஷாசுரமர்த்தனியென்றும், தாரகனைக் கொன்றதால் தாரகமர்த்தனியென்றும், சூலத்தைத்தாங்கினமையால் சூலினியென்றும் இன்னோரன்ன பெயர்களையுடையவள்.

உமாதேவியார் கோபத்தினிடத்துதித்து அசுரரைக் கொன்றவளெனவும், உமாதேவியாரைச் சிவபெருமான் காளி [கருநிறமுடையாளே] யென விளித்தபொழுது மனம்வருந்திக் கௌரியாக வரமேற்றுத்தன் கருநிறத்தை விலக்கஅது தேவியாயிற்றெனவும் சில நூல்கள் கூறும்.

(2) சத்தியவதி. வியாசரைப்பெற்றவள. (3) சப்தமாதருளொருத்தி. இவளுக்குப் பேய்வாகனம்.

காளிங்கராயன்—சோணாட்டுச் சிற்றரசரிலொருவன்.

காளிங்கர்—திருக்குறளுக்குரையிட்ட ஆசிரியர் பதின்மரிலொருவர்.

காளிங்கன்—ஒருநாகன். இவன் யமுனாமடுவிலின்று 'அக்நீரை' நஞ்சாக்கி அதிலிறங்குவோரைக்கொன்று

வந்தமையின், கண்ணன் அங்குற்று அவன் சிரமிசைத்தாளூன்றி நர்த்தனஞ்செய்து, அவன் பத்னியராகிய நாககன்னியர் வேண்டுகோளால் உயிர்ப்பிச்சையளிக்கப்பெற்றவன்.

காளிதாசகவி—போஜராஜ சமஸ்தானத்துச்சம்ஸ்கிருத கவிகள் ஒன்பதின்மரிற்சிறந்தவன். காளியுபாசகனாதலின் காளிதாசனெனப்பட்டவன். அதிமதுரமாகச் சிருங்கார ரசம்பாடுதலில் வல்லவன். சாகுந்தலம், மாளவிகாக்கினி மித்திரம், விக்கிரமோர்வசீயம், இரகுவமிசம் குமாரசம்பவ முதலிய நாடகங்களும் காவியங்களும் இயற்றியவன். தண்டியோடு பகைமை கொண்டவன். காளிதாசகவியின் சமத்கார விடயங்கள் எழுதக் கணக்கின்றிப் பரக்குமாதலின் அவன் சரிதையிற் கண்டுகொள்க.

காளிந்தி—(1) களிந்தகிரியினின்றிழியும் நதி. இது யமுனையென்றும் பெயருறும் (2) சுமதியின் மனைவி (3) கிருஷ்ணனுடைய அஷ்டபாரிகளிலொருத்தி இவள் சூரியன் மகள்.

காளிபீடம் - சத்திபீடங்கள் அறுபத்து நான்கனுளொன்று. இது காலஞ்சரத்திலுள்ளது.

காளிம்பன் — தொண்டை நாட்டில் திருவேங்கடத்தி லிருந்து தமிழ்ப் புலவர்களை யாதரித்த ஒரு வேளாண்பிரபு.

காளியன்—ஒரு நாகன - காளிங்கனிற்காண்க.

காளேஸ்வரம்-ஒரு புண்ணியஸ்தலம். பயோஷ்ணிநதியுங் கோதாவரி நதியுங் கலக்குமிடத்திலுள்ளது.

கானக்காளை - திருக்கானப்பேரூரிலே சிவபெருமானுக் குரியதிருநாமம்.

கானப்பேரெயில்—வேங்கை மார்பனென்னும் சிற்றரசனுக் குரித்தாயிருந்த ஒருபேரரண். இவ்வரண் உக்கிரப்பெருவழுதியாற் போர்செய்துவென்று சுவாதீனஞ் செய்யப்பட்டது.

கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி—சேரமான்மாவெண்கோ சோழன் இராஜசூயம்வேட்டபெருநற்கிள்ளி இவர்களுடையநண்பன். கடைச்சங்கமிரீஇய பாண்டியர்நாற்பத்தொன்பதின்மரிற் கடைப்பட்டவன். திருக்குறள் இவன்முன்னரரங்கேற்றப்பட்டது. அக்குறளுக்கு இவன்கூறிய வெண்பாவொன்றுளது. எட்டுத் தொகையுள் அகநானூறு தொகுப்பித்தவன். வேங்கைமார்பனென்னும் பகைவனை வென்றுபல சிற்றரண்களை யுடைய கானப்பேரெயில் எனும் அரணைக் கைக்கொண்டவன். இவனைப்பாடினோர் ஐயூர் மூலங் கிழார், ஔவையார் முதலியோர்.

கானப்பேர்—பாண்டி நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவஸ்தலங்களிலொன்று. ஈழத்தரசனுனை பராக்கிரமவாகுவென்பவனுடைய சேனாபதியின் கைவசமாகச் சிலகால மிருந்தது. இதுசிறந்தபேரரண், பலசிற்றரண்களையுடையது. இது, தலைவனுனவேங்கை மார்பனை உக்கிரப்பெருவழுதி போரில்வென்றுகைக் கொள்ளப்பட்டது. இது காளையார் கோயிலெனவழங்குகிறது.

காளுர் குழலம்மை—திருக்காளுட்டு முள்ளூரிலே உமாதேவி யாருக்கு வழங்குந்திருநாமம்.

# கி

கிட்கில்-நல்லியக்கோடனூர் [சிறுபா]

கிடாம்பிப்பெருமாள்—வைணவ சிங்காசனாதிபதிகளெழுபத்துநால்வருளொருவர்.

கிடாம்பியாச்சான்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

கிட்கிந்தை—வானரவீரர்களான வாலியும் சுக்கிரீவனும்அரசிருந்தவிடம். இது பல்லாரி ஜில்லாவில், அர்ப்பனஹல்லிதாலூக்காவிலுள்ளது.

கிம்புருஷர்—பதினெண் தேவகணங்களுளொருசாரார். இவர் குதிரை முகமும்மானுடவுடலுமாயிருப்பர்.

கிம்புருஷன்—புலகன் மகன்.

கிம்மீரன்—ஓரிராக்கதன். பத்தியானை பலமுடைய பகாசுரனுக் கிளவல். காமியகவனத்தி லிருந்தவன வீமசேனனாற் கொல்லப்பட்டவன்.

கியாதி—(1) தக்ஷப்பிரஜாபதிபுத்திரி. பிருகுமுனிவர் மனைவி. தாதை விதாதை இலக்குமியின்தாய். இலக்குமியை மணந்ததிருமால், அசுரர்க்கடைக்கல மளித்தமை கண்டு சினந்து மாமியென்றுங் கருதாது அவள்தலையைத் துணித்து பிருகு முனிவனால்பத்துப்பிறவியையடையச்சாபமேற்றனர். கியாதி அசுர குருவாகிய சுக்கிரனால் உயிர்பெற்றனள். (2) உன்முகன் புத்திரன்.

கிரகபதி—அக்கினி. இமையோர்க்கு அவிசுமந்து சென்றவன். இவன் ஒருகாலத்தில் அத்தொழில் புரியவியலாது கடலிற்கரந்துவசித்ததலே, மச்சங்களுணர்த்து தேவர்கட்குணர்த்தினமையின், மச்சங்கள் மானுடர்க்காகாரமாகவெனச் சபித்தவன்.

கிரணம்—இருபத்தெட்டுச் சிவாகமங்களிலொன்று. இதுசிவபிரானுர்க்கு இரத்தினபரணமும ஒன்பதுபேதமும் ஐந்துகோடி கிரந்தமுமாக விளங்கும.

கிராதமூர்த்தி—சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுளொன்று. சிவபெருமான் வேடராகவும், உமாதேவி வேடுவ மங்கையாகவும், கணபதியுங் கந்தரும் வேடுகச்சிறுராகவும், வேதங்களுனான்கும் நான்குநாய்களாகவுஞ்சென்று திருவிளையாடல்புரிந்த அவசரம். இது பரசுராமன்தவத்தைச்சோதித்து வரமருளியகாலத்தும், அருச்சுனன் தவஞ் செய்தபொழுது மூகாசுரசங்காரஞ்செய்த காலத்தும் நிகழ்ந்தது.

கிராதார்ச்சுனீயம்—அருச்சுனன்தவஞ்செய்கையில்வேடவுருக்கொண்டு [கிராதமூர்த்தியாய்] வந்தசிவபெருமானுக்கும அருச்சுனனுக்கும் நிகழ்ந்தவற்றைவிளக்கிககூறும்வடமொழிக்காவியம்.

கிராமதேவதை—கிராமங்கள்ஒவ்வொன்றிலுங் காவற்றேவதையாயுள்ள பிடாரி. இதுசத்தி யமிசம் ஐயனார் முதலியன வெனக்கூறலமையாது.

கிரிகை—ஓரப்சரஸ்திரீ. பிரமசாபத்தால் மச்சவடிவாய் யமுனைநதியில் வசித்திருந்தவள். உபரிசரவசுவெனும் அயோத்தி மன்னன் வீரியத்தை யுண்டுகருவடைந்து வலேயிலகப்பட்டு மாய்ந்தவள். உபரிசரவசுவிற் காண்க.

கிரிஜா—கிரிகையின்மகள். கிரிகைமச்சவடிவாயிருக்கையிலுண்டானவள்

கிரியாசத்தி—ஞானசத்தியி வாயிரத்

தொருகூறுகொண்டது. சிருஷ்டியாதிகிருத்தியங்களைச்செய்வது.

கிரிவிரசம்—(1)மகத நாட்டின்இராஜதானி சுற்றிலும் மலைக்கோட்டையிருத்தலின் இப்பெயர் பெற்றது, (2) கேகயநாட்டி ராஜதானி. குசனது நான்காம்புதல்வனான வசுவினால் ஸ்தாபிக்கப்பட்டது. தர்மாரணியத்தருகிலுள்ளது.

கிரீடி—அருச்சுனன். தேவலோகத்திற் சென்று தேவேந்திரன் கொடுத்த கிரீடத்தைப்புனைந்து சிங்காசனத்தில் வீற்றிருந்தமையின்இப்பெயர் பெற்றவன்.

கிருகரன்—தசவாயுக்களி லொன்று. முகத்திடை நின்று தும்மல் சினம் வெம்மைகளை விளைவிப்பது.

கிருசன்—ஓரிருடி.

கிருசாசுவன்—அமிதாசுவன மகன்.

கிருசாநுரேதன்—சிவன் [கிருசாநு= அக்கினி.]

கிருதகன்—யதுவமிசத்து வசுதேவன் [புதல்வன

கிருதகிருத்தியன்—திரிசகுப்தன் மகன். விரக்தனாயிறந்தவன்.

கிருதகோடி— பிரமாணவாத நூலாசிரியராகிய ஒருமுனிவர். பிரத்தியக்ஷமுதலிய பிரமாணம் பத்தனுள் இவர் ஏழுமட்டையே கொண்டவர் [மணி]

கிருதசிரவணன்—பரசுராமனுக் கிளை [வல்.

கிருதத்யுதி—அங்கராஜ குமாரி. சித்திரகேதனன் ஜேஷ்டமனைவி.

கிருதமந்தன் — யமீநரன் புத்திரன். கிருதிமந்தனெனவும் படுவன்.

கிருதமாலை—ஒருநதி. மலயமலையிலுதித்துவருவது.

கிருதயுகம்—சதுர் யுகங்களில் முற்பட்டது. இது பதினேழிலக்ஷத்திருபத்தெண்ணாயிர வருடங்கொண்டது. இது தருமமுறை தவறாத காலமாதலின்தருமயுகம் சத்தியயுகமுதலிய பெயர்கள்பெறும். இவ்யுகத்தில் கஷ்டம் வஞ்சனை தேவதாஷணை வேதமூதலிய வற்றை நம்பாமை பிறர் பொருள் வவ்வுதல் பிறர்மனை நயத்தல் முதலிய தீச்செயல்கள் ஒருசிறிதுமின்றியாவும் நன்றாகவே நிகழ்ந்தன.

கிருதராதன்—மகாதிருதிமகன்.

கிருதவாமன்—(1) இருதிகன் புத்திரன். தேவமீடனுக்கிளவல். பாரதப்போரில்அசுவத்தாமாவுக்குத்துணைநின்றவன். (2) கிருத வீரியனுக்கிளவல்.

கிருதவீரியன்—தனிகன்மகன். இவன் மகன் கார்த்தவீரியார்ச்சுனன்.

கிருதவுஜன்—கிருதவீரியனுக்கிளவல்

கிருதன்—(1) கம்பீரன் புத்திரன். இவன் மரபினர் அந்தணராயினர். (2) யதுமரபினன். பலராமனுக்கிளவல். (3) விதர்ப்பனுக்கு இரண்டாம்புத்திரன்.

கிருதாக்கினி—கிருதவீரியன்தம்பி.

கிருதாசி—ஓரப்சரசு.

கிருதாசுவன்—இக்ஷ்வாகு மரபினன். பரிகிஞசுவனுக்கு மூத்தமைந்தன். இரண்டாம்யவனாசுவனுக்குப்பிதா.

கிருதாந்தன்—இயமன்.

கிருதாயு-அரிஷ்டநேமியின்புத்திரன்.

கிருதி—(1) சநநதமந்தன் புத்திரன். இரணியநாபன்பால் யோக மார்க்கமுணர்ந்து சாமசங்கிதையைக்கீழைத்தேசங்களிற் சென் றுபதேசித்தவன் (2)வருணாசுவன் மகன்(3)விபுமகன் (4) சியவனன்மகன்.

கிருது—(1) பிரமன் மானசபுத்திரர்

களில் ஒருவன். தக்ஷப் பிரஜாபதி மகள் சந்ததியிடத்து அங்குஷ்டப் (பெருவிரல்) பிரமாணமுள்ளவால கில்லிய ரென்னும் அறுபதி னாயிரம் இருடிகளைப் பெற்றவன். (2) அங்கன்தம்பி. உன்முகனென்றும் பெயருடையவன்.

கிருத்சமதன்—ஓரிருடி. இவன் ரதந்தரமென்னுஞ் சாமகானஞ் செய்கையில் அபசுரமாயிருந்ததெனச் சினந்தவசிஷ்ட முனிவர், நீர்த்துளியுஞ் சருகுமில்லாத வனத்தில் இருபத்தொன்பதி னாயிர வருட மிருக்க வெனச்சபிக்கப், பெரிதும் வருந்தி அவ்வண்ணமே தண்டகாரணியஞ் சென்று பஞ்சாக்ஷரஜபஞ் செய்து மிருகமுகத்துடன் லம்போதரகணங்கட்குத்தலைவனானவன் [சைவபு]

கிருத்ஸ்நமதன்—சுநகன் றந்தை. சுகோத்திரன்மகன். க்ஷத்திர விருத்தன் பௌத்திரன்.

கிருத்திகாசுதன் — முருகக் கடவுள். கார்த்திகைப் பெண்கள் அறுவர் முலையுண்டமையின், ஷாண்மாதுரனெனவுஞ் சொல்லப்படுவன்.

கிருத்திகை—இருபத்தேழு நக்ஷத்திரங்களில் மூன்றாவது. இது ஆறு நக்ஷத்திரங்களின் றொகுதி. இவவாறவரே குமாரக்கடவுளைப் பாலூட்டி வளர்த்தவர்.

கிருத்திர கூடம்—மகததேசத் திராஜதானியா யிருந்த இராஜக்கிருகா நகரத்தருகே யுள்ளமலை. கௌதம புத்தர் ஒருகாலத்தில் இதன்மீது நின்று பலர்க்குந் தர்மோபதேசஞ் செய்தபொழுது அவர் பாதங்கள் [illegible]ந்தப்பெற்றமையின் பாதபங்கயமலையெனப் பெயராயது [மணி]

கிருத்திவாசன்—சிவபிரான்.

கிருபன் } சத்தியதிருதி புத்திரன்.
கிருபாசாரி } துரோணாசாரியர் மைத்துனன். கௌரவவீரர்க் கெல்லாம் வில்லாசிரியன். பாரத யுத்தத்தில் கௌரவர் பக்கலி லிருந்தவன். சிரஞ்சீவிகளிலொருவன்.

கிருபாநாயகி—திருக்கருவூரில் உமாதேவியார் திருநாமம்.

கிருபி—சத்தியதிருதிபுத்திரி. கிருபாசாரியின்தங்கை. துரோணாசாரியர் மனைவி. அசுவத்தாமன்தாய்.

கிருபீடஜன்மன் } (1) சந்திரன் (2)
கிருபீடயோனி. } அக்கினி [ஜலத்தி லுதித்தவன்] [புத்திரன்

கிருமி— உசீநரனுடைய நான்காவது

கிருமிலாபுரம்—கிருமியால் நிருமிக்கப்பட்ட ஒருநகரம்.

கிருஷ்ணகர்ணாமிருதம்—ஸ்ரீலீலாசுகராற் செய்யப்பட்டதொருநூல்.

கிருஷ்ணஜயந்தி—கிருஷ்ணன் பிறந்தநாள் ஆவணிமாசகிருஷ்ணபக்ஷ அஷ்டமி. இது ஒரு வைணவ விரத தினம்.

கிருஷ்ணதேவி—கிருஷ்ணா நதியின் நாமாந்தரம். [முனிவர்

கிருஷ்ண த்வைபாயனர் — வியாச

கிருஷ்ணராயன்—(1) [illegible]. இரண்டாம்விக்கிர மாதித்தனுக்கு நண்பன். (2) "படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான், மடைசெறிகடகத்தோளான் மதிக்குடை மன்னர்மன்னன், கெடிமன்னர் வணங்குந் தாளான்கிருட்டினராயன் கைபோற், கோடைமட மென்ப தம்மலையாத் கொடுத்தலாமே."—என்ச் சூடாமணிநிகண்டுரைஎன்பதாம் பெயர்நிகேர்த்தி.

யில், 10 - ம் பாட்டிற் கூறப்பட்டவன். வீரை மண்டலவ்ர் காலத்தவன். இவன் செஞ்சியரசன்.

கிருஷ்ணன்-திருமாலின்தசாவதாரத்தொருமூர்த்தி. ஒருகாலத்தில் கம்ஸன் சிசுபாலன் தந்தவக்கிரன் முதலிய கொடியோரால் துன்புற்ற தேவர்கள் திருமாலிடம் விண்ணப்பிக்க, அவர் வைகுண்டத்தில் துவாரபாலகராயிருந்த ஜயவிஜயர் துருவாச சாபத்தால் கம்சசிசுபாலராகத்தோன்றித் துன்பு புரிதலின அவர்களை யடர்த்த அவதாரம்.

கம்சன் தன்தங்கை தேவகியை வசுதேவர்க்கு மணம் புணர்த்தி, இருவரையுந் தேரிற்கொண்டு வனங்காணச் சென்றபொழுது "உன் தங்கை வயிற்றிற் பிறக்கும் எட்டாம் பிள்ளையால் நீ யிறப்பாய்" என் றசரீரியுண்டாக, கம்சன் உடனே வாளை யுருவித் தேவகியை வெட்டப்புக, வசுதேவர் "இவளை வெட்டற்க. இவளிடத் துதிக்கும் பிள்ளைகளை யுன்பால் ஒப்புவிக்கின்றேன்" என அதற்கிணங்கி விடுத்தானாயினும், அவவிருவரையுங்காவலில் வைத்துப்பிள்ளைகள்பிறக்குந்தோறுங்கொன்றுவந்து ஏழாங்குழந்தை குறைமாசத்திற்பிறக்க, அதனைவசுதேவன் தன்மற்றொருமனைவியான கோகுலத்திலிருந்த ரோகிணியிடங்கொடுத்து வளர்ப்பித்தனன். அம்மகவேபலராமன். காவலர் கம்சனிடஞ் சென்றுவ ழாக்குப் பம்அழிந்துவிட்டதெனக்கூறினர் எட்டாங் குழந்தையாகக் கிருஷ்ணன்பிறந்தனன். யோகமாயையா லப்பொழுது அனைவர்க்கும் நித்திரையுண்டாயது. சங்கு சக்ர கதா கட்கங்களோதண்டதாரனாய்த்திருமால் காட்சியளித்துக் கூறிய வண்ணம் வசுதேவர் ஒருவருக்குந் தோன்றாமல் அவ்விரவிலேயே யமுனையின் மறுகரையில் நந்தகோபன் மனையில் வைத்துவிட்டு அப்பொழுது தான்பிறந்த யசோதையின்சிசுவையெடுத்துவந்து தன்னிருக்கையில் வைத்தனர். அதற்குள்யோகமாயை நீங்கிக்காவலர் சிசுவின் அழுகுரல் கேட்டுக்கம்சனுக்கறிவிக்க, அவன் அச் சிசுவினைக் கொல்லக் கருதி மேலேயெறிய, அது ஆகாயமார்க்கத்திற் கிளம்பிஎட்டுக்கைகளோடு விளங்கி, "அடாகம்ஸா! என்னையேன்வீணே கொல்லப்பார்த்தாய். உன்னைமுற்பிறப்பிற் கொன்றதிருமால்வேறுமனையிற்பிறந்துஉன்னைக்கொல்லவளர்க்கின்றான்." என்றுகூறிமறைந்தது. கம்ஸன்இனியிவர்களைக் காவலி லிருத்துதலிற் பயனின்றென்றுவசுதேவரையுந்தேவகியையும் விட்டு விட்டனன். வசுதேவர் பலராமனையும் நந்தகோபர் மனையில்விட, இருவரும்வளர்ந்து வந்தார்கள்.

நந்தகோபர் மனையில் கிருஷ்ணன் வளர்ந்து வருவதை யறிந்த கம்சன் பூதனையென்னும் பேயை அவனைக் கொல்கவென்றேவ, அப்பேய் ஸ்தனங்களில் நஞ்சுதடவிக்கொண்டு, கிருஷ்ணனை யெடுத்துப் பாலூட்ட, கிருஷ்ணன் வாயாலுறிஞ்சி அவள் முலைப்பாலுடன் உதிரமுதலியனநீங்கியலற மாய்த்தனன்.

ஓரசுரன், சகடவடிவாய்வா நந்தகோபர் அதிலிருத்தப் பாலுக்கழு

பவன்போல்சகடத்தையுதைத்துத் தூளாக்கிஅவ்வசுரனைமாய்த்தனன். கண்ணனும் பலராமனும், அங் கேகட்டியிருந்த கன்றுகளையவிழ் த்துப் பாலூட்டக்கண்ட யசோதை கண்ணனை உரலிற்பிணிப்ப, அத னோடுதவழ்ந்துசென்று(நளகூபரன் மணிக்கிரீவ னென்னும் குபேரன் புத்திரரிருவர்,சாபத்தால் உருமாறி க்கிடந்த) மருதமரங்க ளிரண்டினி டையேதவழ்ந்து அவற்றை வீழ்த்தி அவர்கள் சாபத்தை விமோசனஞ் செய்தனன்.

ஒரசுரன் கொக்குருவாய்க் கண் ணனைத்தன் மூக்காற்குத்தித்துன்பு செய்யத் தொடங்குகையில் கண் ணன் அதனைக் காலான் மிதித்து அதன்வாயைப்பிளந்து கொன்றன ன்.இவன்பகாசுரனெனப்படுவேன்.

கோவர்த்தனத்தைக்குடையாகப் பிடித்துப் பசுக்களையும் ஆயர்களை யுங் காத்தனன்.

கம்சன்செய்தபலஉபாயத்தினாலு ம் கண்ணன்கொல்லப்படாது கண் ணனால்கம்சன்கொல்லப்பட்டனன். இவ்வவதாரத்தில் சிசுபாலன் தந் தவக்கிரன் முதலியோர் கொல்லப் பட்டார்கள். கிருஷ்ணனுக்கு அஷ் டபாரியைகள்-அவருள்உருக்மிணி சத்தியபாமை இராதை யென்னு மிவர்களேபிரியமனைவியர்.

அர்ச்சுனனுக்கு மிக்க நண்பன். அர்ச்சுனன் நரனும், கிருஷ்ணன் நாரணனுமாகப் பிறந்தவர்கள். அர் ச்சுன னிடத்துற்ற அன்பினாலே பாரதப் போரில் தூது சென்றும் தேர் கடவியும் கீதை உபதேசம் புரிந்தும் பாண்டவர்க்கு ஜயமுண் டாக்குவித்தவன். கண்ணனுடைய இளமைப் பருவச் செயல் களும் போர்வல்லபமும் தயாள குணமு முதலியன விளக்கவிரியு மாகலின் இங்கு இடந்தருவன வல்ல வென நிறுத்தினோம்.

கிருஷ்ணன்கினை—கைருதன் முக்கிய பட்டணம்.

கிருஷ்ணை—(1) ஒருநதி (2) திரௌபதிதேவி.

கிரௌஞ்சன்—மைநாகன் புத்திரன். இம்மலையின் கண் வதிந்திருந்த மாயாவியாகிய தாரகன்மீது குமாரக்கடவுள்செலுத்திய வேற்படை தாரகன்மார்பையும் கிரௌஞ்சகிரியையும் பிளந்து சென்று முருகக்கடவுளையடைந்தது.

கிழார்—வேளாளர்க்கு வழங்கும் பட்டப்பெயர்.

கிள்ளிவளவன்—ஒருசோழன். கோடு முடிக்கிள்ளியிற்காண்க.

கின்னரப் பிரமையர்—தமது செல்வ முழுவதுஞ் சங்கமர்கட்கே செலவிட்டுவறியராய் இறுதியில் சிவாலயத்தில் கின்னரம் வாசித்துச் சிவ கடாக்ஷத்தால் நாளொன்றுக்கு ஒரு பொற்காசு பெற்ற வீரசைவர்.

கின்னரர்—தேவசாதியர் பதினெண் மருள் ஒருசாரார். அசுவ முகமும் மானுடதேகமுமுடையவர்கள்.

கின்னரன்—புலகன்மகன்.

கின்னலரயர்—ஒருவீரசைவர். இவர் தேகவியோக மடைந்த பொழுது, வசவதேவர்தமதுநிஷ்டைவழியால் தமதுபிராண வாயுவைக் கலக்கச் செய்து எழுப்பப்பெற்றவர்.

## கீ

கீசகர்—விராடராஜன் மனைவியாகிய சுதேஷ்ணை யென்பாளுடன்பிறந்த

சகோதரர்கள். இவர்கள் நூற்றுவர் இவருள் மூத்தவன் கீசகனெனப் படுவோன். பாண்டவர் அஞ்ஞாத வாசத்தில் விராடநகரத்தில் வசித்த பொழுது அக்கீசகன் திரௌபதியைப் பலாத்காரப்படுத்த அதகாரணமாக அவனும் அவன் சகோதரா நூற்றுவரும் பீமசேனனுற் கொல்லப்பட்டார்கள்.

கீசகன்—கீசகரிற்காண்க.

கீரந்தையார்—(1) திருவள்ளுவமாலை சொல்லிய கடைச்சங்கப் புலவருளொருவர் (2) மதுரையி லிருந்த ஒருவர் [ சிலப் ]

கீர்த்திபூஷண லோலபாண்டியன்—மதுரையையாண்ட நாற்பத் தைந்தாம்பாண்டியன். அதுலகீர்த்தி பாண்டியன் புத்திரன். இவன் காலத்தில் ஒருபிரளயம் வந்து, குமரியாற்றையும் அதைச்சார்ந்த நாற்பத்தொன்பது நாடுகளையும் கடலிற் கலக்கச்செய்தது. [மனைவி.

கீர்த்திமதி— சகுனிமகன். அணுகன்

கீர்த்திமாலினி-சந்திராங்கதன்புத்திரி

கீர்த்திரதன்—மிதிலைநகரத்துப் பிரதிரதகன்புத்திரன்.

கீர்த்திராதன்—மிதிலை நகரத்துமகாப் ...புத்திரன்.

## கு

குகன்—(1) முருகக்கடவுள் (2)கிராதராஜன். சிருங்கிபேரத்திருந்தவன். இவன் இராமனிடத்து மிக்க பக்தியுடையவன்.

குகியகர்—குபேரனுடைய நவநிதிகளைக்காவல் செய்வோர். [இரகசியத்தை வெளிவிடாதவர்]

குசு—பிரமன்மனைவியரிலொருவர்

குகுரன்—அந்தகாசுரனது புத்திரன்.

குகைநமச்சிவாயர்—ஒருசித்தர் திருவண்ணாமலையில் குகையில் வசித்தவர். அந்தகருகிலிருந்த ஆலமரத்தில் தூங்கும் ஊஞ்சலிட்டு அதில் சயனித்துக்கொள்வர். இவர் அருணகிரியந்தாதி யியற்றியவர். இவர் சீடர்களிற் சிறந்தவர்குருநமச் சிவாயர். இவரைப்பற்றியவிவரங்களைக் குருநமச்சிவாயரிற் காண்க.

குக்ஷி—இக்ஷ்வாகு புத்திரன். இவன் புத்திரன் விகுக்ஷி.

குங்கிலியக் கலயநாயனர்—அறுபான்மும்மைநாயன்மாருளொருவர். திருக்கடவூரில் வேதியர் குலத்துதித்துக்குங்கிலியத்தூபத்தொண்டு செய்துவறுமையுற்று, உணவுக்கு நெல் வாங்கிவரச்சென்ற தாலியை, எதிர்வரக்கண்ட குங்கிலியப் பொதிக்கு மாறி, அக்குங்கிலியத்தை ஆலயத்துக்குக் கொண்டுசென்று மனைவி மக்கள் பட்டினியைமறந்து தூபமிட்டவர். வீடெல்லாம் நெல்லாகப் பெற்றவர். சிவகடாக்ஷத்தால்முத்தியடைந்தவர்.

குங்குமபாண்டியன்—மதுரையை யாண்ட அறுபத்தொன்பதாம் பாண்டியன். சுரதமார பாண்டியனுக்குப் பின்வந்தவன்.

குசத்துவஜன்—ஜனகன்தம்பி. பரதசத்ருக்நருக்கு மாமன்.

குசநாபன்—குசன் மகன். வசந்தமாரணியநகரத்தரசன் இவன் புதல்வியர்நூற்றுவர். இவர்கள் வாயுதேவன்சாபமேற்றுப் பெண்மை யிழந்தமையின்,சூளிமுனிவர் புத்திரனை பிரமதத்தனென்னுமிருடி இவர்களுக்குற்ற குறையையகற்றி மணம்

பெற்றனன்.

குசலவர்—(குசன் + லவன்) இவ்விருவரும் இராமன்மக்கள். சீதைகருப்பிணியாயிருக்கையில், இராவணன் வனத்தில் பத்துமாத மிருந்தவளை வருவித்து வைத்திருப்பது அபவாதமென்று நினைத்துச் சிறிதுந் தயவின்றி வான்மீகி யாச்சிரமத்தில் விடுப்ப, அவ்விடத்தே பிறந்த பிள்ளைகள். இவர்கள வான்மீகியால்பலநூலாராய்ச்சி யுடையராயினர். அசுவமேதத்தில் இராமசரிதையைக் கீதமாகப் பாடினவர்கள்.

குசஸ்தலி-ஒருநகரம். மதுராபுரிஜராசந்தனால் எரிக்கப் பட்ட பின்னர், கண்ணனுக்கிராஜதானி யிருந்தது. இது விந்தியகிரிமுகத்தில், ரைவததுர்க்கத்திலுள்ளது.

குசன்—(1) பிரம புத்திரு ளொருவன். காசிராஜனுக்குப் பாட்டன். குசன் குசநாபன் ஆதூர்த்தன் வசு எனும் புதல்வரைப்பெற்றவன். (2) இராமன் புத்திரரி லொருவன். குசலவரிற்காண்க.

குசாக்கிரன்— பிருகத்திரதன் புத்திரன். ஜராசந்தனுக்கிளவல்.

குசாம்பன்—குசன் புத்திரன். கீரதியின் பிதா.

குசாவதி—குசனது இராஜதானி. உத்தரகோசலத்திலுள்ளது.

குசாவர்த்தம்—ஒருதீர்த்தம். கங்காத்துவாரத்தின் கீழ்ப்பக்கத்தி லுள்ளது. கங்காத்துவாரத்திற்குப் பதினேந்து யோசனை தூரத்தி லுள்ளதென்று சைவபுராண ஞானசங்கிதைகூறுகின்றது.

குசிகன்—விசுவா மித்திரன் பிதாமகன். பலாகாசுவன் புதல்வன். ஒரரசன். தவத்தால் இந்திரனைத் தரித்து அவனையே மகனாகக் கொண்டவன். இவன்பெயர்காதி. காதிக்குச்சத்தியவதி யென்றொரு மகள். அவளை இரிசிகமுனிமணந்து காதிராஜனுக்குச் சந்ததிவிருத்திசெய்ய விரும்பி, ஒருயாகஞ்செய்து இரண்டுசருகுகளையெடுத்து மனைவியிடந்தந்து, இதனை உன்தாயுட் கொண்டால் ஒருக்ஷத்திரிய சிரேஷ்டனும், இதனை நீயுட் கொண்டால் பிராமணதருமங் குறையாத புதல்வனும் பெறுவீர்களென, சத்தியவதி அவ்விரண்டையுந் தாயிடந்தந்து விடயத்தையுணர்த்த, அவள் செய்த வஞ்சனையால் மகளுடையதைத்தாயும் தாயுடையதை மகளுமாகமாறிப்புசித்து, காதிமைந்தராக விசுவாமித்திரரும் (சத்யவதி வயிற்றில் ஜமதக்கினியும்) ஜமதக்கினி புத்திரராகப் பரசுராமரும் பிறந்தனர். ஜமதக்கினி க்ஷத்திரிய தர்மத்தூடனுதிக்காது அவர்மகன் அங்ஙனமுதித்தது இரிசிகமுனிவர் அநுக்கிரகத்தாலென்றுணரப்படும்.

குசீலவன்—மைத்திரேயன் தந்தை.

குசுமபுரம்—பாடலிபுத்திரம்.

குசுமேஷன்—மன்மதன் [மலர்க்கணை] யுடையோன்.]

குசும்பன்—உபரிசரவசு புத்திரன்.

குசேலன்—கண்ணனுக்கு நண்பனான ஒரந்தணன்.

குசேலோபாக்கியாநம்—குசேலன் சரித்தையைக் கூறும்நூல். இதில் வறுமையாலெய்துந் துன்பமும் பிறர்பால்யாசித்தலா லுண்டாகு மிழிவும் பலவகைத்தருமங்களும் ஆங்காங்கு நன்குவிளக்கப்பட்டன குசேலர்கண்

ணனிடஞ் சென்று, தான்கொண்டு போன அவலைக்கொடுத்து மீண்டு செல்வமடைந்து வாழ்ந்து பரமபத மடைந்த விவரம் நன்குகுறிக்கப் பட்டுளது.

குச்சகன்—ஒருமுனி இவன் மகன் கவுச்சிகன்; தன் தவத்தில் மெய்ம்மறந்திருந்து மிருககண்டுயனெனப் பெயர் பெற்றவன்; இவன் உசத்தியமுனிவன் புத்திரியாகிய விருத்தையை மணந்து மார்க்கண்டேயனைப் பெற்றவன்.

குச்சரக் குடிகை — சம்பா பதியின் [கோயில்,

குஜம்பன்—(1) தாரக யுத்தத்திலவருணனென்னும் பூதவீரனாற் கொல் [லப்பட்டவன்.

குஜன்—செவ்வாய்.

குஞ்சரன்—(1) கஜாசுரன் (2) ஒரு வானரன். அஞ்சனையின்பிதா. அனுமானுடைய பாட்டன்.

குடக்கூத்து—புறநாடகம் பதினொன்றனுளொன்று. இது திருமாலுக்குரியது. வாணாசுரன் உஷை காரணமாக அநிருத்தனைச் சிறை யிட்டபொழுது அவனுடைய சோவென்னுநகரவீதியிற் சென்று கண்ணன் குடங்கொண்டாடினமையின் இஃதிப்பெயரேற்றது. இதற்குறுப்புக் [illegible]

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை—ஒருசேரராஜன். எட்டுத்தொகையுளொன்றான பதிற்றுப்பத்தில் தன்மீது பெருங்குன்றூர்க்கிழார் ஒன்பதாம்பத்தினைப்பாட முப்பத்தீராயிரம் பொற்காசுமுதலிய பலபரிசில்கள்தந்து ஊர் மனை ஏர் முதலியன அவனை யறியாதுகொடுத்தவன். பதினாறியாண்டு அரசுவீற்றிருந்தவன்.

குடநாடுதிருப்புலியூர்—ஒரு விஷ்ணு க்ஷேத்திரம். மலைநாட்டிலுள்ளது.

குடந்தம்—ஒருகூத்து. இதனை, நால் விரன் முடக்கிப் பெருவிர னிறுத்தி, நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்" எனுஞ்சூத்திரத்தானறிக.

குடபன்—ஓரிருஷி.

குடபுலவியனார்—பாண்டியன் நெடுஞ்செழியனைப்பாடிய ஒருபுலவர்.

குடமலை—சையகிரி - இதுமேற்றிசையிலிருத்தலின் இப்பெயரேற்றது. இதுவேகாவிரியுதிக்குமிடம்.

குடவாயில் நல்லாதனார்—ஒல்லையூர்க்கிழான்மகன் பெருஞ்சாத்தனிறந்த பின்பு அவனதுபிரிவாற்றாதுபாடிய புலவர். [புறநா]

குடைக்கூத்து—புறநாடகம் பதினொன்றனுளொன்று. இதுமுருகக்கடவுளுக்குரியது. போர்செய்தற் காற்றாத அசுரர்கள் தம்முடைய ஆயுதங்களை யெறிந்துவிட்டு வருந்திய பொழுது முருகக்கடவுள் கையிலிருந்த குடையை முன்னேசாய்த்து அதுவே ஒருமுகவெழினியாய் நின்றாடினமையின் இஃதிப்பெயர்பெற்றது. இதற்குறுப்புகள் நான்கு.

குட்டுவன்கீரனார்—ஆய்என்னும் வள்ளலைப்பாடியபுலவர்களிலொருவர்.

குட்டுவன்சேரலன்—கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்மகன். பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தினைத் தன்மீதுபாடிய பரணர்க்கு அவன் தந்தைகொடுத்த உம்பற்காட்டுவருவாயோடு பரிசாகக் கொடுக்கப்பட்டவன்.

குணசேனன்—அச்சுவகிரீவன் சேனாவீரரிலொருவன். [சூளா]

குணநூல்—ஒருநாடகத் தமிழ் நூல். இதிற் சிற்சில சூத்திரங்கள் தவிர,

மற்றவை யிறந்ததாக அடியார்க்கு நல்லாருரையால் அறியப்படும்.

குணமாலை — சீவகன் மனைவி யருளொருத்தி.

குணவாயில்—வஞ்சிநகரத்தின் கிழக்கேயுள்ள ஒரூர். இளங்கோவடிகள் துறவுபூண்டிருந்தவிடம். [சிலப்]

குணவீரபண்டிதன்-(1)தமிழ் நிகண்டு செய்த ஒருசமணவித்துவான் ? (2) நேமிநாத மென்னும் இலக்கணநூலாசிரியர்.

குஞட்டியன்—மாலியவந்தன். இவன் உருத்திர சாபத்தாற் பூமியிற் பிறந்தவன்.

குணி—யுகந்தரன் பிதா.

குண்டலகேசி—ஐம்பெருங்காப்பியங்களுளொன்று. பிக்ஷுணி யாகிய குண்டலகேசியெனப் பெயரியஒரு வணிகக் குலமகளின் சரிதத்தைக் கூறுதலின் இப்பெயரேற்றது. இதில் அவள் வைதிகர் முதலிய எல்லாச் சமயிகளையும் வென்று தன் பௌத்த மதத்தைப் பரவச்செய்த வரலாறு கூறப்பட்டுள்ள தெனத் தெரியவருகிறது.

குண்டலை—பகாசுரனுற் கொல்லப்பட்ட விந்திய வந்தன்பாரி. கருதிய விடமெல்லாஞ் செல்லும் வல்லபமுடையாள்.

குண்டினபுரம்—விதர்ப்ப நாட்டிராஜதானி. அமராவதிக்கு வடகிழக்கில் நான்குயோஜனையிலுள்ளது.

குண்டுகட்பாலியாதன்—சேரமான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கருங்கோவாழியாதனைப்பாடியபுலவர்.

குண்டேர்க்கூற்றம்—சேரநாட்டின் ஒருபாகம்.

குண்டோதரன்—ஒருகுறுத்தாட்பூதகணன் - இவன் பெருவயிற்றினனாதலின் இப்பெய ரேற்றனன். இவன் சிவபெருமானுக்குக் குடைபிடிப்பவன். உமாதேவியார் தடாதகைப்பிராட்டி யாராகத் திருவவதாரஞ் செய்தபொழுது நிகழ்ந்த திருமணத்தில், உணவாதிகள் உண்பாரின் றி யெஞ்சுகினறன வெனப் பிராட்டியார் சோமசுந்தரப் பெருமானுக்குணர்த்த இவன்வயிற்றில் வடவாமுகாக்கினியைப்புகுத்தி இவனுக்குச்சிறிது உணவிட்டுக்கொண்டுவருகவென, இவன் சமைத்ததும் சமைக்காததுமாகிய அன்னம் அரிசி காய்கறி இலை நெய் பால் தயிர் எண்ணெய் முதலியவற்றை யுண்டும் பசிதணியாளுய் இறைவர்பா லடைந்து பசிதணிந்திலேனென, இறைவர் அன்னக்குழி வருவித்து இவன்பசியையும் வைகையாற்றைவருவித்து நீர்வேட்கையையும் தணிக்கப்பெற்றவன்.

குதிரைமலை — எழினி அதியமான் மலையென்றும் பிட்டங்கொற்றன் மலையென்றும் புறநானூறுகூறும். ஊராக்குதிரையென்றும், குதிரைமூக்குமலையென்றும் பெயருறும். இது தென் கன்னட ஜில்லாவிலுள்ளது.

குத்சன்—அங்கிரசன்மரபினன். வேதங்களிற்சிலகீதங்கட்குக்கர்த்தா.

குந்தலம்—பல்லாரிபிராந்தியத்திற்குப்பண்டையபெயர்.

குந்தி—(1) கேகயன் பௌத்திரன். தர்மநேத்திரன் மகன். (2) விதர்ப்பன் பௌத்திரன். புருதன்மகன். (3) சாத்துவன் மகனுகிய மகாபோசன் மரபினன், பாண்டவர்

தாயாகிய குந்திக்கு வளர்த்தத
ந்தை. இவனை குந்திபோஜனென்
றும் பெயருறுவான். (4) பாண்ட
வர் கட்குத்தாய். தேவமீடனுக்கு
மாரிஷையிடம் பிறந்தவள். பிரு
தையென்றும் பெயருடையவள்.
தந்தைகட்டளையால் துர்வாசமுனி
வருக்கு ஏவல்புரிந்து, தியானித்த
மாத்திரத்திலே பிரசன்னமாகிப்
புத்திரோற்பத்தி செய்விக்கத்தக்க
மந்திரோபதேசம்பெற்று, அதனை
ப்பரிசோதிக்கக்கருதி அககன்னிப்
பருவத்திலேயே சூரியனைத்தியா
னிக்கச் சூரியன் பிரசன்னனாகிக்
கூடக் கன்னனைப் பெற்றவள்.
கன்னிப்பருவமாதலின் அதிகநாண
முற்று அக் குழந்தையைப் பே
ழையில் வைத்து நதியில் விட்ட
வள். பின்னர், பாண்டுவுக்கு மனைவி
யாகி அவன்மனைவியைப் புணராத
படி நேர்ந்தசாபத்தாலும் தனக்குத்
துர்வாசப் பிரசாதமந்திர பலத்தா
லும் சந்ததி யுண்டுசெய்யக்கருதி,
தருமன் வாயு இந்திரன் இவர்களை
த்தியானித்து தருமராஜன் பீம
சேனன் அர்ச்சுனன் இவர்களைப்
பெற்றும், தன் இளையளாகிய மத
திரை யென்னுஞ் சகக்களத்திக்கு
அசுவினிதேவர் மந்திரத்தை யுப
தேசித்து நகுல சக தேவர்களை
அவளிடமுண்டுசெய்தும் விளங்கி
யவள். கர்ணனிடஞ்சென்று நாகக்
கணையை ஒருமுறைக் கதிகமாக
அர்ச்சுனன் மேல்விடாமல் வரமே
ற்றவள். கர்ணன் விருப்பின்படி
அவனிறந்தபொழுது பிரேதத்தின்
மேல்விழுந்தழுது அவன் பிறப்பை
வெளியிட்டவள்.

குந்திபுரி—ஒருநகரம். இஃதிப்பொ
ழுது குவாலியர் எனவழங்கும்.

குந்திபோஜன் — பாரத யுத்தத்திற்
பாண்டவர்பக்கலிலிருந்தஒரரசன்.

குந்து—ஜைனமதஸ்தாபகரான இரு
பத்து நான்குதீர்த்தங் கரர்களிற்
பதினேழாவதாகத் தோன்றியவர்.

குபன்—ஒருகாலத்தில் ஏகசக்கிராதி
பதியாயிருந்தவன். இவன் காரண
மாகத் திருமால் ததீசிமுனிவர்
மீது சக்கிராயுதத்தைச் செலுத்தி
அது கூர்வாய் மடிந்தமையின்,
சிவார்ச்சனைசெய்து சலந்தரனைச்
சங்கரித்தசக்கிரத்தைப்பெற்றனர்

குபாண்டன் — வாணாசுரன்மந்திரி.
[சைவபு]

குபேரதத்தன் — சுரமஞ்சரியின் [தந்தை.

குபேரமித்திரன் — குணமாலையின்
பிதா.

குபேரன் — விச்சிர வசுபுத்திரன்.
அஷ்டதிக்குப் பாலகர்களில் வட
திசைக்காவலன். , கின்னரர்க்கர
சன். அரனது தோழன். நவநிதிக
ளையுமுடையவன். இவன் நகரம்
அளகாபுரி. ஊர்வன புருஷவாக
னம குதிரை புஷ்பக விமானம்.
மனைவி சித்திரரேகை. பார்வதி
சாபததால் ஏகாக்ஷியானவன். விச்
சிரவசு புத்திரனாதலின் வைச்சிர
வண னென்றும்பெயர்.

குமட்டோர்க்கண்ணனார்—பதிற்றுப்பத்
தில் இரண்டாம் பத்தினை, இமய
வரம்பன் நெடுஞ்சேரலாதன் மேற்
பாடி உம்பர்காட்டு ஐஞ்ஞூறூர்
பிரமதாயமும், முப்பத்தெட்டுவரு
டம் தென்னாட்டு வரு வாயிற்பாக
மும் பரிசிலாகப் பெற்றவர். இவர்
பிராமணர்.

**குமணன்**— தொண்டை நாட்டிலுள்ள முதிரமலைக்குச் சிற்றரசன். தமிழ்க்கலைவிநோதன். கவிவாணரைப் பெரிதும் பாராட்டியவன. இவன்தம்பி இளங்குமணனென்பான வஞ்சனையால் நாட்டைக் கைப்பற்ற, வனத்தை யடைந்து வசித்தான். புலவர்கள் பண்டைய பழக்கத்தால் அங்குஞ் சென்று கண்டு வருவாராயினர். அங்ஙனமாக, பெருந்தலைச் சாத்தனார் இவனைக்கண்டு தம்வறுமையை வெளியிட்டுநிற்ப, குமணன்மனம் வருந்தி "அந்நாள் வந்திலை யருங்கவிப்புலவோய், இந்நாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய், தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன், விலைதனைமீட்டுன் வெறுமைநோய்களையே" எனக் கூறி, தனது தம்பியினிடந்தன் தலையைக் கொடுப்போர் பாதிராச்சியம் பெறுவரென வெளியிட்டு வாளைக்கொடுத்தது தலைவணங்க, புலவர் இருசெவித் தொளையும் பொத்திக்கொண்டு சிவசிவவென்று சென்று இளங்குமணனையடைந்து விடயத்தை வெளியிட்டு இருவரையும் நட்புச் செய்து பகைமையை யொழித்தனர். இவனைப்பாடிய புலவர் பெருஞ்சித்திரனார், பெருஞ்சாத்தனார் முதலிய புலவர்கள்.

**குமரகுருபரசுவாமிகள்**— வேளாண் குலத்துதித்த ஒருபுலவர். இவர் இளமைப்பருவத்தில் மூங்கையாயிருந்தமையின் தந்தையார் திருச்செந்தூர்க் கந்தர் கோயிலுக்குக் கொண்டுபோய்ஆங்கிறைவனைப் பிரார்த்தித்தபொழுது அம்மூங்கைத் தன்மைநீங்கிக் கந்தர்கலிவெண்பா வென்னும் அரியபிரபந்தம்பாடி அற்புதம் விளைத்தவர். இவர் மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ், மீனாக்ஷியம்மைகுறம், மீனாக்ஷியம்மை இரட்டைமணிமாலை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர செய்யுட்கோவை, பண்டார மும்மணிக் கோவை. சிதம்பரமும்மணிக்கோவை. நீதிநெறிவிளக்கம், சகலகலாவல்லிமாலை முதலியன இயற்றியவர். காசியாத்திரை சென்று வழியில் தம்மையெதிர்த்த புலியை வாகனமாகக்கொண்டவர். தருமபுரவாதீனமடங்காசியிற்கட்டிக்குமாரசுவாமிமட மெனவழங்குவித்தவர். காசியில் தம்மொடு முரணிய முகம்மதியர்களுக்கு தெய்வீகங் காண்பித்து அவர்களைச்சுவாதீனப்படுத்தியவர். நவாப்பினிடம் திருமடத்திற்கு நிலமும் மானியமு முதலியன பெற்றவர். சித்தாந்தசைவர். இவர் காலம் நூற்றெண்பது வருடங்கட்கு முன்னிருந்திருக்கலாம்.

**குமரகோட்டம்**—முருகக்கடவுள் திருப்பதிகளிலொன்று. இது காஞ்சியிலுள்ளது.

**குமரன்**—(1) முருகக்கடவுள் (2) கலிங்கநாட்டிலுள்ள கபிலபுரத்தரசன்.

**குமரி**—(1) ஒருநதி - கன்னியாகுமரியெனவும்படும். பரதகண்டத்தின் தென்பக்கலிலிருப்பது. பலருந்தத்தம் பாவங்களைப் போக்குதற்குச் சென்று ஆடுவதோர் புண்ணியதீர்த்தம். அதனருகே பூஷ்பஹாரவலியெனப் பெயருற்ற குமரித்தெ

ய்வம் எழுந்தருளியிருக்கும். இதனையுள்ளிட்ட நாற்பத்தொன்பது நாடுகள் கடல் கொண்டொழிந்து போயின; பின்னர், அதன் வடக்கிலிருந்த நாடு குமரி நாடென்றும் பௌவம் குமரிப்பௌவமென்றும் பெயர்வழங்கின வென்பாருமுளர்.

குமரிக்கோடு— பரத கண்டத்தின் தென்பாலுள்ள ஒருமலை. இதுகடல்கொண்டொழிந்தது [சிலப்]

குமாரக்கடவுள் } குமார சுவாமி } இளையபிள்ளையார் கார்த்திகேயர், கங்காபுத்திரர், ஆண்டலைக் கொடியோன், சரவணபவன், கடம்பன், தாரகாரி, குறிஞ்சிவேந்தன், விசாகன், சேந்தன், சிலம்பன், செவ்வேள், மயில்வாகனன், தேவசேனாபதி முதலிய திருநாமங்களையுடையவர். சிவபெருமானிடந் தேவர் சென்று சூரபன்மாதியர் துயரைக்கூற இறைவன் நெற்றிவிழியினின்று ஆறுநெருப்புப் பொறிகளையுண்டுசெய்து அவற்றை அக்கினியாற் கங்கையிற் சேர்ப்பித்தும் கங்கையாற் சரவணத்திற் சேர்ப்பித்தும் விட, அவை ஆறுகுழந்தைகளாகி விளையாட, திருமால் முதலிய தேவர்கள் பத்துத்திசைகளிலுங்காத்து, கார்த்திகைப்பெண்கள் அறுவரால் முலையூட்டிவளர்த்து, ஒருநாள் உமா தேவியாருடன் சிவபெருமான் ஆண்டுற்றபொழுது, உமாதேவியார் ஆறுகுழந்தைகளையும் ஒருசேரவெடுப்ப, ஆறுதிருமுகமும் பன்னிருதிருக்கரமும் ஒரேயுடலுமாக, ஸ்கந்தனென்று திருநாமமிட்டுக் கைலைக்குக் கொண்டுவரப் பட்டவர். பிரமனைச் சிறையிட்டவர். சிவபெருமானுக்குப் பிரணவப்பொருளையுபதேசித்தவர். தாரகனைக் கொன்றவர். வீரவாகுவைத் தூதனுப்பிப் பலவகைப் புத்தி கூறியும் சூரபன்மன் கேளானாக, சிங்கமுகன் பானுகோபன் அக்கினிமுகன் முதலிய அநேகருடன் சூரபன்மனைக் கொன்று தேவர்சிறையைவிடுத்துத் தெய்வயானையம்மையையும் வள்ளிநாயகியையும் மணம்புரிந்தவர்.

இவரதருள் பெற்றோர் அகஸ்தியர் - முசுகுந்தர் - நக்கீரர் அருணகிரியார் முதலெண்ணிலார். வழிபடுசமயம்கௌமாரமெனப்படும்.

இவருக்கு அன்புசெய்யத் தக்கவை திருப்புகழ் திருவகுப்பு கந்தரனுபூதி கந்தரந்தாதி திருமுருகாற்றுப்படை கந்தர்கலி வெண்பா கந்தர்சஷ்டிகவச முதலியன.

குமாரசம்பவம்—காளிதாசராற்செய்யப்பட்ட வடமொழிக் காவியங்களிலொன்று. இது குமாரசுவாமியின் அவதார விசேஷங்கூறும்.

குமாரதேவர்—வீரசைவப் பெரியாரிலொருவர். கருநடதேசத் தரசராயிருந்து ஞானநூலாராய்ச்சியில் மேம்பட்டு விரக்தி யடைந்து, அரசச்செல்வஞ்சுற்றம்மனைவிமுதலியஒரு பற்று மின்றிக் கடுந்துறவி யாய்ப் பல தேசங்களிற் சஞ்சரித்துக்கொண்டுவந்து, மேலைச்சிதம்பரமெனும் பேறை யூரை யடைந்து, சாந்தலிங்க சுவாமிகளிடத்தே ஞானோபதேசம் பெற்று, அங்குச்சின்னாள் வசித்து அவர் கட்டளையால் திருமுதுகுன்றமெனும்விருத்தாசலத்தை யடைந்து வசிக்கத் துணிந்து, பசி

தாகம் நித்திரைகளையும் பொருட்படுத்தாது, கடு நடையாக நடந்து செல்லுகையில், வழியில்களைப்பையும்பசிதாகங்களையுந் தணிக்கச்சிவபெருமானால் அமைந்திருந்த தண்ணீர்ப்பந்தலில் உண்டுபருகி விடாய்தீர்ந்து, சிறிதுநேரத்தில் அவ்விடங்காடாகவிருக்கக்கண்டு இறைவன் திருவிளையாட்டென் றுணர்ந்து விருத்தாசலத்தையடைந்து ஓரரசமரநீழலில் தங்க, உமாதேவியார் ஒரு வேதியப்பெண்ணாகி, நீ மிகக் களைத்திருக் கின்றனை - இதனைப் பருகுக என்று வள்ளத்திற் பால் கொடுக்கப்பருகிச் சிறந்த ஞானமடைந்துநிற்கையில், அம்மரத்திலிருந்து ஒருஜடாமுனி அந்தண வடிவாக இறங்கிச் சாஷ்டாங்கமாகப்பணிந்துநிற்கதேவர்நீயாரென.யான் ஒருமலையில்தவஞ்செய்துசிவபெருமானைத் தரிசித்து வரங்கேட்கையில் ஒன்றையவாவி மற்றொன்றைக்கேட்டமையின், இறைவன் வெகுண்டு முனிவடிவெய்துகவெனச் சபித்து, என்னருகே தவஞ்செய்து கொண்டிருந்த தேரரைச் சுட்டி "இவன் முத்திகருதித்தவஞ் செய்கின்றான். இது ஆறும்பிறப்பு. அடுத்தபிறவியில் அஃதவனுக்குக் கைகூடும். நீ விருத்தாசலத்தி லிருப்பின் அங்கடைந்தபோது அவனைக் கண்டு உன்முனிவடிவகன்று பிரமபதமடைவை. அவனுக்கு இவ்விடயங்களை யுணர்த்துக" எனக்கிருபை புரிந்தனரென்று கூறிப்பணிந்து விடைகொண்டுதனக்குற்ற விமானத்தி லேறிச்சென்றனன்.

அவ்விருத்தாசலத்தி லிருந்தவருவன் நாடோறும் தேவரைப் பணிந்துவருங்கயில், ஒருநாள் என்னெனவினவ, "புத்திரப்பேறு விரும்பியுள்ளேன். அதனை யநுக்கிரகிக்க வேண்டும்" எனத் திருவெண்ணீறளித்தனர். அதனை மனைவிபாலளித்துப் புசிக்கச்செய்ய, அவள் இருகூறுசெய்து உண்டமையின் இருபுத்திரராகப் பெற்றனள். அவ்விரு சிறார்க்கும் தக்க ஆசிரியரைக்கொண்டு கல்விபயிற்றுவிக்க வேண்டுமென்று கட்டளையிட, தென்னாட்டில் சிறந்த வித்வானாக விளங்கிய சிதம்பரப்பிள்ளையைவித்தியாகுருவாக்கினர். [இச்சிதம்பரப் பிள்ளை பின்னர் குமாரதேவர் சீடராய்த் திருப்போரூர்ப் பணிவிடைகளைச் செய்தவர்.]

குஷ்டரோகமுள்ள வொருவன் அத்துயர் நீங்காது தன்புற்றுப் பிரார்த்திக்கக் கண்டு அவன் கரத்தில் திருவெண்ணீறு பிரசாதித்து எதிரிலிருந்த விநாயகரிடங் கண்மூடிச் சென்று வருக வென்று, அதனையக் கடவுள் பரிசித்தது கண்டு அவனை உட்கொள்ளச்செய்து அவ்வியாதியைப் போக்கியருளினர்.

துறவிகள் ஒரேயிடத்தில் ஒரு நாளைக்கு மேலிருக்கப் படாதென்னு நியதியுடையராயினும் பெரியநாயகியார் கட்டளைப்படி விருத்தாசலத்தை யடிக்கடி யடைவதும் அராமையுள்ள புலஸ்தலங்கட்குச் சென்றுதிரும்பு வதுமா யிருந்தவர்.

திருவாரூரில்தியாகராசப் பெருமான் இரதமேறித் திருவீதி முனையில் நிற்கையில் இவர் மறுமுனை

யில்நின்று தலையை நிமிர்த்துஎறிட்டுப்பார்த்திருப்பது கண்ட சைவரிருவர் 'வீரசைவமருள்' என்றஒரு வீராவொருவர் பேசிக்கொண்டதைக்கேட்டு 'தியாகராசா! வீரசைவம் மருளானால் இரதம் நடக்க. அருளானால் இரதம் நிற்க' என, இரதம் அவ்விடத்தே நின்றுவிட்டது. அல்லதெவ் வாற்றானும் அங்கிருந்து அசையாது பலரும் வருந்துகையில், இவ்விவர முணர்ந்த சிலர் அரசனுக்குணர்த்த அரசன் வேண்டுகோளினால் "தியாகராசா! வீரசைவம் அருளானால் இரதம் நடக்க. மருளானால் இரதம் நிற்க" என்றுகூறி இரதத்தை நடத்தினர்.

இவர் கரபிக்ஷைசெய்துவருவது வழக்கமாக, ஒருவன் சமைத்த மச்சத்தை அன்னத்துட் பொதிந்து இவர்கரத்திலிட, வழக்கப்படி அங்கேயே புசியாது சென்றஒருதடாகத்தை யடைந்து "மச்சமே! நட" என, அம்மீன் உயிர்பெற்று நீரிற் குதித்துவிட, அன்னத்தை நீரிலலம்பி உட்கொண்டனர். அதைக் கண்ட அவன் மன்னிப்பு கேட்டுச் சென்றனன்.

மற்றொருகாலத்தில், விருத்தாசலத்திலிருந்த காளிகாதேவி குமாரதேவரைப்பணிந்து, 'யான் இவ்வூர்க்காளி. என்னை மந்திரசக்தியால், ஒருவன் சுவாதீனப்படுத்துகிறான். நாளைகொண்டு செல்வானாகலின், என்னைக் காக்கவேண்டும்" என, அஃதென்னால்எங்ஙனமாகும் என, "நாளை இத்தனை நாழிகைக்கு என் விக்கிரகப் பிரதிமைக்கு உமது பாதத்தை வைப்பின், என்விக்கிரகத்திற்கும் அவனுக்கும் சூத்திரசம்பந்தஞ் செய்துள்ளானாகலின் அவன் கண்ணொளி மழுங்கிவிடுவான். நான்தப்புவேன்" எனக்கூற, அதற்கிசைந்து, குறித்தகாலத்தில் அங்ஙனஞ் செய்தமையின், அவ்வடநாட்டான் கண்ணொளி மழுங்கிக் குமாரதேவரையடைந்து பலவாறு பிரார்த்திப்ப, மீண்டும் இத்தகைய தீச்செயல்புரியாமல் உறுதியான வாக்குத்தத்தம் பெற்றுக் கொண்டு ஒரு கண்கொடுத்து அனுப்பினர்.

இவர் மகாராசாதுறவு-சுத்தசாதகம்-விஞ்ஞானசாரம்-அத்துவித வுண்மை - பிரமானுபூதி விளக்கம் - ஞானவம்மானை-வேதாந்த தசாவத்தைக் கட்டளைச் சுருக்கம்-வேதாந்த தசகாரியக் கட்டளை - சகசநிட்டை-உபதேசசித்தாந்தக் கட்டளை-பிரமசித்தியகவல் - சிவதரிசனவகவல்-ஆகமநெறி யகவல்-வேதநெறியகவல் - பிரமானுபவவகவல் - சிவசமரசவாதவகவல் என்னும் பதினாறு சாஸ்திரங்களை யியற்றியவர். சிவாத்துவித சிவஞான குரவராய் விருத்தாசலத்திலே அரசமர நீழலிலே சமாதிகொண்டனர்.

குமாரி—ஒருநதி. இருக்ஷ பர்வதத்தினுதிப்பது.

குமுதாண்பன்—சந்திரன்.

குமுதம்—தென்மேற்குத் திசையிலுள்ள யானை. இதன்பிடி அநுபமை.

குமுதவதி—ஒருநதி - விந்தகிரியினின்று பெருகுவது.

குமுதன்—(1) திருமாலின் பரிசாரகரிலொருவன் (2) சுக்கிரீவன் சேனாவீரரி லொருவன்.

குமுதாக்ஷன் — வானர சேனுவீரரிலொருவன்.

கும்பகர்ணன்—இராவணன் தம்பி - கடுந்தவஞ்செய்து பிரமன் பிரசன்னமானபோது தவறுதலாக நித்திரை வேண்டுமென வரங்கேட்டவன். மகாபலசாலி. நித்திராபங்கமுற்றகாலத்தில் இறக்க வரமேற்று இராமாயண யுத்தத்தில் இராவணனு லெழுப்பப்பட்டு அபஜயமுற்றிறந்தவன். இவன்கற்கடியென்பாளைக் கூடிப் பீமனென்பவனைப் பெற்றவன் [சைவ.பு]

கும்பகன் — விதேக தேயத்திருந்த ஒருயாதவன். தாரகயுத்தத்திலிறந்த காலநேமியின் புதல்வரெழுவரும் இவன் வீட்டிற் காளைகளாய்ப்பிறந்திருந்தனர். இவர்களைக் கொன்ற கிருஷ்ணன் இவன் மகள் நீலையை மணஞ்செய்தான்.

கும்பன்—(1) கும்பகர்ணன்மகனுகிய ராக்ஷஸன். சுக்கிரீவனுற்கொல்லப்பட்டவன் (2) சுக்கிரீவன் சேனுவீரரிலொருவன்.

கும்பாண்டன்—வாணுசுரன் மந்திரி. கவந்தனென்றும்பெயர்.

கும்பி—கருடவமிசத்துச் சம்பாதிமகனுகிய சுபார்சுவன் புத்திரன்.

கும்பிபாகம்—ஒருமகாநரகம்.

கும்பீநசை—(1) சுமாலி மகள். கரதூஷணர்களைப் பெற்றவள் (2) அங்காரவர்ணன் மனைவி.

கும்பேசுவரர்— கும்ப கோணத்தில் சிவபிரானுக்குவழங்குந்திருநாமம்.

கும்போதரன்—சிவபெருமான் இடபாரோகணஞ்செய்கையில், படிக்கட்டுபோல் வளைந்து முதுகின் மேல்தாங்கிநிற்குஞ்சிவகணவீரன்.

குயிலமுதாம்பிகை—திருக் கொடுங் குன்றத்தில் உமாதேவி யாருக்கு வழங்குந் திருநாமம்.

குயிலாலுவம் - இயாசலத்தருகிலுள்ள ஒருசிவாலயம் [சிலப்.]

குயின்மொழியம்மை—(1) திருமாகாளம் (2) திருச்சாய்க்காடு - இந்த க்ஷேத்திரங்களில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

குய்யகலோகம்—உலோபத் தன்மையுடையோ ரடைவதோ ருலகு [காசிகண்.]

குரவிநம்பி-வைணவ சிங்காசனுதிபதிகளெழுபத்துநால்வருளொருவர்.

குரவைக்கூத்து—காமமும் வெகுளியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக, எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் வட்டமாக நின்று,வகைபிணைந்தாடுவது. "குரவை யென்பதெழுவர் மங்கையர், செந்நிலை மண்டிலக் கடகக்கை கோத்துத், தந்நிலை கொட்ப நின்றுடலாகும்" எனுஞ் சூத்திரத்தில் எழுவராடுவதென் றுள்ளது.

குரு—(1) உருசிரவன். (2) பிரகஸ்பதி (3) பூசநாள் (4) துரோணுசாரியன் (5) பிரபாகரனெனும் மீமாம்சன் (6) அஜமீடன் புத்திரனு இருக்ஷன்பௌத்திரன். இவன்பிதா சம்வர்ணன் வசித்த விடமானதால் சமந்தபஞ்சகமென்னுமிடம் குருக்ஷேத்திரமாயது. இவன்வமிசத்தில் வந்த விசித்திர வீரியனே கௌரவர்க்கும்பாண்டவர்க்கும்பாட்டன்.

குருகு—இடைச் சங்கத்தி லிருந்ததொருநூல்.

குருக்ஷேத்திரம்—சமந்த பஞ்சகம், ஸ்தாணேசுவரம்எனும்பெயர்கொ

யுடையது. பிரமனுருத்தரவேதி. பாரதயுத்தநிகழ்ந்தவிடம்.

குருஜாங்கலம்-அஸ்தினபுரிக்கும் பாஞ்சாலத்திற்கும் இடையிலுள்ள தேசம்.

குருஜித்து—அஞ்சகன் புத்திரன்.

குருதத்தை—சிவகன் தோழனாகிய ஸ்ரீதத்தன்தாய்.

குருதாமன்—திஷ்யந்தன் புத்திரன்.

குருதிக்கண்ணன்—இராக்கதன், இராவணயுத்தத்தில் நளனாற் கொலலப்பட்டவன்.

குருதேசம்—அஸ்தினபுரியை இராஜதானியா யுடையதேசம்.

குருத்ருஹன்—ஒருவேடன். வழிபறித்தும் மிருகங்களைக்கொன்றும்பலவகை யிடையூறு செய்தவன். ஒரு சிவராத்திரியன்று பகல் முழுதுந் திரிந்து இரையகப்படாது இரவு வர, ஆங்கோர் தடாகத்திற் சிறிது நீர்பருகி, நீர்வேட்கை தணிக்கமிருகங்கள் இங்குவரலாமென்றுகருதி, பாத்திரத்திற் சிறிதுநீரேற்று அருகிருந்த வில்வமரத்தேறி யொளித்திருந்தனன். முதல்யாமத்தில் ஒரு மானும், இரண்டாவதுயாமத்தில் அதன்மூத்தமனைவியும், மூன்றும் யாமத்தில் அதன் இளைய மனைவியும் வர, அவற்றையெய்யவில்லைக் குணத்தொனிசெய்ய, அவைகேட்டுத் தன்குட்டிகட்குக் கூறிவருவதாய்ச் சொல்லிப் போயின. ஒவ்வொரு முறையும் வில்லை யெடுக்கையில், கைப்பாத்திரத் திருந்த சிறிதுநீரும் மரத்தி லிருந்த சிவவில்வ தளங்களும் அடியி லிருந்த சிவலிங்கத்தின்மேல் விழுந்தது இரவுமுற்றும் நித்திரையின்றிச், சிவ

பூஜாபலனை யடைந்தான். மான்கள்மூன்றும் நியமனப்படி அவனுக்கிரையாகவந்தன. வேடனோ சிவபூஜாவிசேஷத்தால் ஞானமுற்றுக் கொல்லமாட்டேனென்றான். அச்சமயத்தில் தேவ விமான முற்று வேடனையும் மான்களையும் ஏற்றிக்கொண்டுசென்றது. [சைவபு]

குருநமச்சிவாயர்—திருவண்ணுமலையிலெழுந்தருளிய குகைநமச்சிவாயரது சீஷர்களி லொருவர். இவர் ஆசிரியர்க்கருகே நின்று பணிவிடைசெய்து கொண்டிருக்கையில், ஒருநாள் குலுக்கென நகைத்தும், ஒருநாள் தமதுத்தரீயத்தைத் தேய்த்தும் நிற்ப, என்னெனக் கேட்ட ஆசிரியர்க்குத் திருவாரூர்த் தியாகேசருற்சவத்தில் நாட்டியப்பெண்ணொருத்திமல்லாந்துவிழயாவருஞ்சிரிததற்கண்டு அடியேனுஞ்சிரித்தேனென்றும், சிதம்பரம் கனகசபைக்கிட்டிருந்த திரை அங்கிருந்த நெய்த்தீபத்தின் திரியை எலியிழுத்துச்செல்கையில் தீப்பற்றியதால் அதனைத் தேய்த்தே னென்றுங் கூறினர். பின் பொருநாள் குகைநமச்சிவாயர் வாந்தி செய்து ஒருதிருவோட்டிற் பிடித்து மனிதர் அடிபடாதவிடத்தில் விடுகவெனக்கட்டளையிட, அதனையுட்கொண்டு, வைக்குமிடத்தே வைத்தேனென்றனர். ஆசிரியர் "ஆல்பழுத்துப்பக்ஷிகளுக்காகாரமாவதென, வேல்பழுத்து நின்றநிலை வீணிலென—" எனக்கூறி, அதனைமுடிக்கவென, இவர் " காலனைய்ம், செய்யா வுனத்தருடன் சேர்ந்து மிருப்பீரோ, ஐயா நமச்சிவா யா"

எனக்கூற, அப்பா என்குரு நமச்சிவாயம்! எனாநதழுவிக்கொண்டு நீமூத்திஸ்தலமாகிய சிதம்பரஞ்சென்று சேர்கவென, அடியேன் குருதரிசனமின்றி யொருநாளுமிரேன் என, நீர் கனகசபையைத் தரிசனஞ்செய்து நம்போல் தரிசனமாகுலங்கிருக்கவென.குருஸ்துதியாகப் பத்துப் பாடல் கூறி விடைகொண்டு கிழக்குவழியே சென்று இருள்வர ஓர்மரத்தடியே நிஷ்டைகூடிப்பசிவர உண்ணுமுலை யம்மனை நோக்கி "அண்ணுமலையாரகத்துக் கினியாளே, உணணு முலையே உமையாளே—நண்ணு, நினைதோறும் போற்றி செய நின்னடியாருண்ண,மனைதோறுஞ்சோறுகொண்டு வா" எனக்கூற அண்ணுமலையார்க்கு நிவேதித்த சர்க்கரைப் பொங்கலைப் பொற்றட்டுடன் கொடுக்கப்புரிந்தனர்.மறுநாள் ஆலயத்துள்ளார்தாம்பாளங்காணப்படாது சிவ கருணையால் விடயமுணர்ந்து தாம்பாளத்தைக் கொண்டு சென்றனர்.

மேலுங்கிழக்கே சென்று, ரிஷிவந்தமென்னுந் தலத்தில் அகஸ்தியப்பிரதிட்டையாகிய அர்த்தநாரீசரைத் தரிசித்து அவ்வம்மையை நோக்கிச்சாப்பாடுகேட்க, அம்மன் என்னைப்பிரித்து நீர்பாடப்படாதே என மீண்டுஞ்சேர்த்துப் பாடி அன்னம்படைக்கப் புரிந்து, அங்கிருந்தகன்று விருத்தாசலமணிமுத்தாநதியில் மூழ்கிப்பெரியநாயகியாரைநோக்கி "நன்றிபுனையும் பெரியநாயகியெனுங் கிழத்தி,என்றுஞ் சிவன்பா விடக்கிழத்தி-நின்ற நிலைக்கிழத்தி மேனிமூழு நிலக்கிழத்தி, மலைக்கிழத்தி சோறுகொண்டு வா" என, அம்மன் தடியூன்றிக்கொண்டு மிக்க கிழவியாய்த் தோன்றி என்னைக்கிழவியென்று பாடவேண்டுமென, பாலகாசியிற் பாலம்பிகை. விருத்தகாசியில் விருத்தாம்பிகையென, அப்படியன்று உன்வாயால் இளமை யாய்ச் சொல்லவேண்டுமென "முத்த நதி சூழுமுதுகுன் றுறைவாளே, பத்தர் பணியும் பதத்தாளே—அத்த, னிடத்தாளே மூவா முலைமேலே ரார, விடத்தாளே சோறுகொண்டுவா" எனக்கூறி அன்னம் பெற்றுண்டு, புவனகிரிக்குச் சென்று, சிதம்பரமடைந்து பலவாறு துதித்துச்சிவகங்கையில் மூழ்கிக் கனகசபையிற் சென்று குகை நமச்சிவாயராகத் தரிசனந்தொடுக்கப் பெற்றுத் துதித்து நிஷ்டையிலிருந்தனர்.

அப்பொழுது நடராசபதி தீக்ஷிதர்கள் கனவிலெழுந்தருளி "இங்குற்ற பெரியார்க்கு நமது சந்நிதியின் வடக்கில், மணிவாசகருக்குத் திருவாசகமெழுதவும் உபமந்யுவுக்குப் பாற்கட லழைக்கவும் இரு முறை நம்பாதம் வைத்தவிடத்தை யிடமாக்குக"வெனக்கட்டளையிட தீக்ஷிதர்கள் அங்கே கொண்டுபோய்விடுப்ப, அவ்விடத்தில் நிஷ்டையிலிருப்பதும் சிவகாமியம்மன் கொடுக்கும் உணவைப் புசிப்பதுமாகவிருக்கையில், பலர் பல்லிரவியங்களை இவர் முன் வைத்துச்செல்ல, ஆட்கொள்ளியென்று பலரையுங் கொண்டுபோகச் செய்ய, தீக்ஷிதர்கள் கண்டு ஆலயத்துள்வரின் பல்திரு

ப்பணிகளும் கட்டளைகளும் நடக்குமென, இவர் இசையயாமையின், சபாநாயகரைப் பிரார்த்திக்க, அவர் சங்கம வடிவாய்ச் சென்று எப்பொழுதும் அன்னமிடுவதாக வரம்பெற்றுவந்துணர்த்த, தீக்ஷிதர்கள் பல்லக்கிலேற்றிக் கொண்டுவந்து கோயிலுட்புகுத்தப் பலதிருப்பணிகளுங் கட்டளைகளும் நியமித்துப் பாதச்சிலம்புங் கிண்கிணியுஞ் செய்விக்கையில், தீக்ஷிதர்கள் நடராசா நிருத்தஞ்செய்யப்போகிறாரா வென்றதுகேட்டு, அவற்றைப் பெருமானுக்கணிவித்து "அம்பல வாவொருக்கா லாடினாற் றாழ்வாமோ உம்பரெலாம் கண்டதெனக் கொப்பாமோ—சம்புவே, வெற்றிப்பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந் தித்தியெண, ஒத்து பதஞ்சலிக்கு மோ." எனக்கூற, நடராஜர் நடித்தனர். பலருங்கண்டதி சயித்தனர். நெடுநேரநடித்தமையின் திருவடி வருந்துமென்று "தூக்கியகால் நோகாதோ துஷ்டன் முயலகன்மேல், தாக்கியகால் தானுஞ்சலியாதோ—காக்கா, தினவரதா தில்லைத் திருத்தாண்ட வாநீ, அனவரதம் கூத்தாடி னால்." எனக்கூறி, நடனத்தை நிறுத்துவித்தனர். அநேககாலம் அங்கிருந்து திருப்பெருந்துறையில் இலிங்காகாரமாயினர்.

குருநாதன்—உலகத்திற்கும் சிவபெருமானுக்குங் குருவாகிய குமாரக்கடவுள்.

குருமூர்த்தி—சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனு ளொன்று. மணிவாசகப் பெருமானுக்குச்சிவஞானபோதத்தை யுபதேசித்துக் குருந்தமரநீழலி லெழுந்தருளிய சிவமூர்த்தி.

குருவசவ்—இரண் டாம் மநுவின் புத்திரன்.

குரோதவசை—தக்ஷப்பிரஜாபதி புத்திரிகளிலொருத்தி. கசியபன் மனைவி. கழுதை ஒட்டகம் மரை முதலியன பெற்றவள்.

குரோஷ்டு—யது புத்திரரி லொருவன். இவன்மகன்விருசிணவந்தன்.

குலசூடாமணி பாண்டியன்—சோமசூடாமணி பாண்டியனுக்குப் பின் மதுரையை யரசுசெய்தவன். ஐம்பத்தொன்பதாம் பாண்டியன். இடைக்காடர்பிணக்குத்தீர்த்த திருவிளை யாடல் இவன் காலத்து நிகழ்ந்தது.

குலசேகர பாண்டியன்—(1) இவன் காலத்திலேயே கடம்பவனந் திருத்தி நகரங்கண்டது. மதுரையிலரசுநிறுத்திய மூதற்பாண்டியன் (2) அறுபத்திரண்டாம் பாண்டியன்.

குலசேகராழ்வார்—கொல்லிநகரத்துத்திடவிரதராஜகுமாரராய்த் தோன்றி அரசுரிமையைக்கைக்கொண்டு பகவத்பக்தியி லாழ்ந்தவர். பலதேசயாத்திரை செய்தவர். மன்னார்கோயிலிலிருந்து திருநாட்டுக்கெழுந்தருளினவர்.

குலச்சிறைநாயனார்—அறுபான் மூம்மைநாயன்மாரு ளொருவர். இவர் மணமேற் குடியிலே பிறந்தவர். கூன்பாண்டியனுக்கு மந்திரத்தலைமை பூண்டவர். பாண்டியனும் அந்நாட்டவரும் சமணமதப்பிரவேசஞ் செய்ததைச்சகியாது, பாண்டியன மனைவியர் மங்கையர்க்கரசியாரும், தானும் அந்தரங்க சிவநேசமுடை

யராயிருந்து, திருஞான சம்பந்த ஸ்வாமிகள் பிரபாவங்களை யுணர்ந்து "வெங்குரு வேந்தரடிபணிந்தடியேன் குலச்சிறை யெழுதுவிண் ணப்பம், இங்கெழுந் தருளிச் சமணிருளொதுக்கி யெம்மிறை மகற்குநீ றளித்து, பொங்கிரும் பணைசூழ் தென்றமிழ் நாட்டைப் பூதிசா தனவழி நிறுத்தி, எங்களைக் காக்க" என் றெழுதியனுப்பி ஸ்வாமிகளைத்தருவித்துச் சமணர்களோடு வாதிட்டு வெற்றிபெறச்செய்து பாண்டியனுக்குற்ற சுரப்பிணியையும் பிறவிக் கூனையும் நீக்கி, நின்றசீர் நெடுமாறநாயனாராக்குவித்தவர்.

குலத்துவச பாண்டியன்—பாண்டசுவரபாண்டியனுக்குப் பின் அரசுசெலுத்தியஐம்பத்தாறும்பாண்டியன்.

குலபதிநாயனார்—திருவள்ளுவ மாலை சொல்லிய கடைச்சங்கப் புலவரிலொருவர்.

குலபர்வதம்—சப்தபர்வதங்கள். அவை மகேந்திரம் கந்தமாதனம் மலயம் சகியம் சுததிமந்தம் விந்தியம் பாரிஜாதமென்பன.

குலபூஷணபாண்டியன்- அநந்தகுணபாண்டியனுக்குப் பின் முடிதரித்தவன். இவன் காலத்தே மெய்க்காட்டிட்டது உலவாக்கிழியருளியது, வளையல் விற்றது, அட்டமாசித்தி யுபதேசித்தது, விடையிலச்சினையிட்டது ஆகிய திருவிளையாடல்கள் நிகழ்ந்தன.

குலேச பாண்டியன்—அரிமர்த் தன பாண்டியன்பிதா. இவன் இடைக்காடர் காலத்திலிருந்தவன்.

குலோத்துங்கசோழன்—சோழராஜர்களிலொருவன். இவன் சமஸ்தானப்புலவர் ஒட்டக்கூத்தர். அவரியற்றிய ஈட்டியெழுபது இவனவைக் களத்தரங்கேற்றப்பட்டது. ஈட்டியெழுபதிற் காண்க. இவன் மீது கோவையும் உலாவும் அப்புலவராலியற்றப்பட்டன. இச்சோழன் ஒட்டக்கூத்தரிடங் கல்வி பயின்றவன்.

குலோத்துங்கசோழனுலா }
குலோத்துங்க சோழன் கோவை }
இவ்விரு பிரபந்தங்களும் ஒட்டக்கூத்தப்புலவராற்செய்யப்பட்டன.

குலோத்துங்க பாண்டியன்—பழியஞ்சியது, மாபாதகந்தீர்த்தது, அங்கம் வெட்டியது ஆகிய திருவிளையாடல்கள் கண்டவன்.

குல்லூகபட்டர்—தரும சாத்திரமொன்றஞ்சிரியரும், மநுஸ்மிருதிக்கு ஒருவியாக்கியானஞ் செய்தவருமாகியபெரியோர்,

குல்லூகபட்டியம்—(1) மநுஸ் மிருதிக்குக் குல்லூக பட்டரியற்றிய வியாக்கியானம் (2) ஒரு வைத்திய நூல். குல்லூகபட்டர் செய்தது.

குவலயநாயகி—திருக்குறங் காடு துறையில் உமாதேவியார்திருநாமம்.

குவலயாசுவன்—(1) சத்துரு ஜித்து புத்திரன். இருதத்துவஜ னென்றும் பெயருடையவன். இவன் ஜலம்காடு மலைமுதலிய நினைத்தவிடங்களிற் சஞ்சரிக்கும் குதிரை யொன்றைக் காலமுனிவரிடத்திற் பெற்றவன். (2) இக்ஷ்வாகு மரபிலுதித்த பிருகதசுவன் புத்திரன். துந்து என்னும் அசுரனைக்கொன்று துந்துமாரனென்னுங் காரணப் பெயரேற்றவன். (3) வற்சன்புத்திரன். அலர்க்கன்பிதா. தாளகேத னென்

றும் பெயர் பெற்றவன்.

குவலயானந்தம்— அப்பைய தீக்ஷிதர் வடமொழியிற் செய்த அலங்கார நூல். இதனை எட்டைய புரஞ்சமஸ்தானத்துப் புலவரொருவர் தமிழ்ப்படுத்தியுளர்.

குவலயாபீடம்—கம்சன் யானை. மிக்க பலவான்களையுங் கொல்லும் ஆற்றலுடையது. கிருஷ்ணனைக் கொல்லும்படி யேவி அவனாற் கொல்லப்பட்டது.

குழல்வாய்மொழியம்மை—திருக்குற்றாலத்தில் உமாதேவியாருக்குவழங்குந்திருநாமம்.

குளிகன்—கசியபருக்குங் கத்துருவுக்கும் பிறந்து மேற்றிசையிற் பூமியைத் தாங்கும் நாகம்.

குறமகளிளவெயினி—நல்லிசைப்புலமை மெல்லியராரிலொருவர்.

குறள்—திருக்குறளிற்காண்க.

குறிஞ்சிப் பாட்டு— பத்துப் பாட்டிலொன்று. தலைவியினது வேற்றுமைகண்டு வருந்திய செவிலிக்கு அறத்தொடு நிற்கும் பாங்கி கூற்றாக ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் 261 அடிகளாற் பாடியது. இதில் தொண்ணூற்றொன்பது மலர்விசேடங் கூறப்பட்டுள்ளது. இதனைப் பெருங்குறிஞ்சியென்றும் வழங்குவர். இதற்கு நச்சினார்க்கினியர் உரை செய்துள்ளார்.

குறுங்கோழியூர் கிழார்—யானைக் கட்சேய்மாந்தரஞ்சேர லிரும்பொறையைப்பாடியபுலவர் [புறநா]

குறுந்திரட்டு— ஒரு தொகைநூல். இதனைத் தொகுத்தார் சொரூபானந்த தேசிகரின் சீடராகிய தத்துவராயர்.

குறுந்தொகை—எட்டுத்தொகையுளிரண்டாவது. கடவுள்வாழ்த்துச்செய்யுண்முதலியநானூற்றிரண்டு அகவற்பாக்களையுடையது. இவற்றுள், முதற்பாவாகிய கடவுள்வாழ்த்துப் பாரதம் பாடிய பெருந் தேவனாராலும், நானூற்றொரு பாக்கள் இப்புத்தோளார் முதல் அம்மூவனாரிறுதியாகிய புலவர் இருநூற்றுநால்வராலும்இயற்றப்பட்டுள்ளன. இது அகப்பொருட்பகுதிகளையேயுடையது. மேற்கூறிய அகவற் பாக்கள் நான்கடிச்சிறுமையும் எட்டடிப்பேரெல்லையுமுடையன. இத்தொகை முடித்தான்பூரிக்கோ. இப்பாக்களுள் இருபது பாக்களொழிந்த ஏனையபாக்கட்குப் பேராசிரியர் பொருளிட்டாரென்றும், அவரொழித்த இருபது பாக்கட்கும் நச்சினார்க்கினியர் பொருளெழுதினாரென்றும் தெரிகின்றன.

குறும்பலாநாதர் — திருக் குற்றாலத்தில் சிவ பெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

குற்றம்பொறுத்தஈசர்—திருக்கருப்பறியலூரில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம். [புத்திரன்.

குனி— மிதிலாபுரத்துச்சித்துவஜன்

குன்றத்தூர் } சேக்கிழார் சுவாமிகள்
குன்றை } ஜனனநகரம், இதுவே

அவர் முதலித் தானமுமாம். இது தொண்டை நாட்டி லுள்ளது.

குன்று தோருடல்—முருகக் கடவுள் திருக்கோயில்கொண் டெழுந்தருளியுள்ள எல்லாமலைகட்கும் வழங்கும் திருநாமம். ஆறுபடைவீடுகளிலொன்று.

குன்றூர்கிழார்மகனார்—நெடுவேளாதனைப்பாடியபுலவர். [புறநா]

குன்றைஎல்லப்பன்-தொண்டைமண்டலத்திலே குன்றத்தூரிலே வேளாண்குலத்திலுதித்துத் தமிழ்ப்புலவர்க்குந் தன்னை யடுத்தோர்க்கும் பொன்மாரி சொரிந்த மகௌதாரியப்பிரபு.

குஸ்மை—தேவகிரியிலிருந்த சுதன்மனுடையஇளையமனைவி. சிவபக்தியிலும் பார்த்திவ லிங்கபூஜையிலுஞ்சிறந்தவள். (அவன்மூத்தமனைவி தனக்குப்புத்திரரின்மையால், தன் தமயன்மகளாகிய இவளைக் கணவனுக்கு மணஞ்செய்விக்க)சுப்பிரியனெனுமகனைப்பெற்றாள். மூத்தாள் பொறாமைகொண்டு, சுப்பிரியன் துயில்கையில் சூரியால் துண்டஞ்செய்து, குஸ்மை அர்ச்சித்தபார்த்திவலிங்கத்தைவிட்டுவருந்தடாகத்திலேயெறிந்துவிட்டனள். விடிந்தபிறகு வழக்கப்படி குஸ்மை சிவலிங்கபூசை முடித்துத் தடாகத்தில் விட்டுவருகையில், சுப்பிரியன்உயிர்த்தெழுந்து 'நான் கொல்லப்பட்டுயிர்த்தேன்' என்று தொடர்ந்துவர, சிவபிரான்தரிசனமளித்துவிடயத்தை வெளியிட்டு ஆங்குக் குஸ்மேசரெனும் பெயரால் விளங்கினர். [சைவபு]

குஹ்யகர்—குபேரனுடைய நவநிதிகளைக்காப்போர்.

## கூ

கூடலூர்கிழார் — எட்டுத் தொகையுளொன்றான ஐங்குறுநூறுதொகுத்தவர். முதுமொழிக்காஞ்சியியற்றியவர். கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையிறந்த போது வருந்திப்பாடியவர்.

கூத்தநூல்—ஒருநாடகத் தமிழ்நூல். இதன்ஆசிரியர் மதிவாணனார். இந்நூலின்செய்யுளொன்று சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லாரால் உதகரிக்கப்பட்டுளது. இந்நூலிறந்தது.

கூத்தன் கவிச்சக்கரவர்த்தி—தக்கயாகப்பரணியியற்றிய ஆசிரியர்.

கூர்ச்சரம— ஒருதேசம். மேற்கடற்கரையிலுள்ளது. [சாதார.

கூர்ச்சரர்—பஞ்ச திராவிடருளொரு

கூர்மபுராணம்—இதுபதினெண்மகாபுராணங்களி லொன்று. இந்திரத்துய்மனனுக்குச் சொன்னது. ஆறாயிரங்கிரந்தங்களையுடையது. இதனைத்தமிழ்க்கவிசெய்தோர் அதிவீரராமபாண்டியர்.

கூர்மன் — தசவாயுக்களி லொன்று. இது உரோமம்புளகித் திமைப்பூச் செய்வது.

கூர்மாண்டதேவர்— இருபத்தெட்டுக்கோடிநரகங்கட்கதிபர். வியோமரூபர் மூர்த்திபேதமா யுள்ளவர்.

கூர்மாரி—சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. இது கூர்மாவதாரங் கொண்டதிருமால்உலகினையழிக்கத்தொடங்கிய பொழுதுதேவர்வேண்டுகோளால் அதன்வீறடக்கிய சிவமூர்த்தி.

கூர்மாவதாரம் — திருப்பாற் கடலைக் கடைய நடுமத்தாகியமந்தரமலையைத் தாங்கத் திருமால் கொண்ட கூர்மவடிவம் கூடிராப்திமதனத்திற் காண்க.

கூலவாணிகன் சாத்தனார்—மணிமேகலைநூலாசிரியர். சிலப் பதிகாரநூ

லாசிரியராகிய இளங்கோவடிகளுக்கும், அவர்தமையன்சேரன் செங்குட்டுவனுக்குமிக்க நண்பர். இவர் மதுரைக்கூலவாணிகன் சாத்தனெனவும் சீத்தலைச் சாத்தனெனவும் கூறப்படுவர்.

கூவத்துநாரணன்—தொண்டைநாட்டுக் கூவமென்னு மூரிலிருந்த ஒரு உதாரபுருஷன். "படுபாவி, கூவத்துநாரணனைக் கொன்றாயே கற்பகப்பூங்,காவெட்டலாயோகரிக்கு" என அவனிறந்தபொழுது ஆற்றாமற்பாடிய கவியு முள்ளது.

கூற்றுவநாயனர்—அறுபான் மும்மைநாயன் மாரு ளொருவர். களந்தையென்னுமூரிலே குறுநில மன்னர் மரபில்தோன்றிப்பஞ்சாக்ஷரஜபத்தாலேயே செல்வம் பராக்கிரமமுதலியனபெற்றுவாழ்ந்துமுத்தியடைந்தவர்.

கூற்றுவன் — இயமன் [உடல் வேறு உயிர்வேறாகக்கூறுபடுத்துவோன]

கூற்றையுதைத்தோன்—சிவபெருமான் காலாந்தகமூர்த்தியிற்காணக.

கூனி-(1) மாதவி தோழி. இவளுக்கு வசந்த மாலையென்றும்நாமாந்தரம் [சிலக] (2) மந்தரை கைகேசியின் றோழி. [ராமா]

கூன் பாண்டியர் — மதுரையையாண்ட எழுபத்து நான்காம்பாண்டியர். அருகமதப்பிரவேசஞ்செய்தமையின், குலச்சிறைநாயனுரெனு மந்திரியார் வேண்டு கோளின் மேல் திருஞானசம்பந்தசுவாமிகள் அங்கெழுந்தருளி,சமணரை வாதிலவென்று அவர் சுரப்பிணியையும் கூனையு மொழித்து நின்றசீர்நெடுமாறநாயனாராக்கப்பெற்றவர்.

# கே

கேகடன்—சங்கடன் மகன்.

கேகயம்—ஒரு தேசம். சிபி புத்திரனுனகேகயனுடையதேசம் விபாச நதியின்வடமேற்கிலுள்ளது.இதன் இராஜதானி கிரிவிரசம்.

கேகயன்—சிபிசக்கிரவர்த்தி புத்திரர் நால்வரில்ஒருவன். இவன் மகள்பரதன் றாயாகிய கைகேயி.

கேசகம்பளன்—நரி வயிற்றிற் பிறந்த ஒரு முனிவன் [மணி]

கேசரி— (1) ஒரு வானரன். பிரபாசத்திலேமுனிவர்கட்கிடுக்கண்செய்து வந்தயானையைக்கொன்றவன் அஞ்சனைகணவன்-அனுமன்தந்தை. (2) சுக்கிரீவன் சேனை வீரரிலொரு

கேசவன்—திருமால். [வன்

கேசவாதித்தன் — பன்னிரு சூரியரிலொருவன். கேசவன் சொற் படி காசியில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூஜித்தவன்.

கேசவார்த்தமூர்த்தி — அறுபத்துநான்கு சிவ மூர்த்தங்களி லொன்று. சிவபெருமான் வலப் புறமும் திருமால் இடப்புறமுமாகநின்று அபேதமாகக் காக்ஷிதந்தநுக்கிரகிக்கும் மூர்த்தி. இதனை, பொன்வண்ணத்தந்தாதியில் " இடமால் வலந்தானிடப்பா றுழாய்வலப் பாலொண்கொன்றை, வடமா லிடந்துகிறேல்வலமாழி யிடம்வலமா,னிடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழில், வலஞ்சேர், குடமா விடம்வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே." என்பதனாலறிக. ஹரிஹரமென்னும் க்ஷேத்திரத்தில் இம் மூர்த்திபிரசித்தம்.